For private circulation only

Book Post

www.tchsportal.co.in

# கிறிஸ்தவ வரலாற்றுச் சுவடுகள்

விலை : ரூ 60

திசை தெரியாமல் திகைக்காதிருக்க திருச்சபை வரலாறு தெரியவேண்டும்

ஏப்ரல் 2021 • இதழ் 11



## திருச்சபை வளர்ச்சியில் உபதேசிகர்கள்



ஆற்றுப்படுத்தியோராய்
எழுத்தறிவித்தவர்களாய்
ஒழுக்க நெறிகற்றுக் கொடுத்தோராய்
கிறிஸ்தவ ஜீவியம் வாழ்ந்தோராய்
கிறிஸ்துவுக்கு இரத்த சாட்சிகளாய்
தமிழ் வளர்த்தோராய்
திருச்சபையின் முதுகெலும்பாய்
வேதம் கற்றுக்கொடுத்தோராய்
மருத்துவ பணி செய்தோராய்
விசுவாச வீரராய்
நீதிபதியாய் . . .

புத்தக அறிமுகம்

# ஈரைம்பது உணர்வுப் பாடல்கள்

அருள்திரு . இலாசரசு செல்வநாதன்
CSI ஆயர் -ஓய்வு

அருள்திரு. இலாசரசு செல்வநாதன் தமிழார்வமும் இசைப் புலமையும், இறையியல் தெளிவும் மிக்க ஓய்வுபெற்ற (CSI) ஆயர். இவரின் 2006 இல் ஈரைம்பது ஈடேற்ற கீர்த்தனைகள் (3000. இரண்டு பதிப்புகள்), 2007 ல் நீங்களே பாடலாம் (50,000 பிரதிகள்), 2008 ல் கீர்த்தனைப் புதையல் (6000. ஆறு பதிப்புகள்), 2012 இல் கிறிஸ்துகுல கீர்த்தனைகள் (CLS) 2018 இல் தினதியான கீர்த்தனைகள் ( 6000, மூன்று பதிப்புகள் ) வெளி வந்துள்ளன. இவர் அமெரிக்கா, சிங்கப்பூர், மலேசியா, இஸ்ரேல், இலங்கை, இங்கிலாந்து ஆகிய நாடுகளுக்குச் சென்று கிறிஸ்தவ - தமிழ் மாநாடுகளில் ஆய்வுக் கட்டுரைகள் வழங்கி இறையிசையினை சொற்பொழிவு ஆற்றியும், காலட்சேபம் செய்தும் இறைப் பணியாற்றி வருகிறார். கீர்த்தனை சீர் பரவுவார். கீர்த்தனை புரவலர். கீர்த்தனை செம்மல், வீரமாமுனிவர், எச்.ஏ. கிருஷ்ணபிள்ளை, முதலான 11 விருதுகளையும் பெற்றுள்ளார். தொலைக்காட்சி தொடரிலும், சென்னைப் பல்கலைக்கழகத்திலும் கீர்த்தனை குறித்த சொற்பொழிவு நிகழ்த்தியவர். ஓய்வுக்குப் பின் 2500 இடங்களுக்கு மேல் சென்று பிரசங்கம், காலட்சேபம் செய்தவர்.

ஈரைம்பது உணர்வுப் பாடல்கள் எனும் இந்நூல் கிறிஸ்தவ அருட்பாக்களின் தொகுப்பு. பெருந்தொற்று உலகைச் சிறைப்படுத்திய நிலையில் இறைப் பற்றை உள்ளங்களில் உறுதி செய்யும் அரிய ஆக்கங்கள். பழம்பெரும் கீர்த்தனை கவிஞர்களை அடியொற்றி எழுதிய கீர்த்தனைகள் இவற்றில் உண்டு. இறையருள் நாடும் விண்ணப்பங்களும் உண்டு. தன்னுணர்ச்சிப் பெருகும் பக்திப் பனுவல்களும் உண்டு. இலக்கண அமைதியோடு இயைந்த இன் கவிகள் உண்டு. அந்தாதித் தொடை அமைந்த அணிநலன்கள் உண்டு. குறள் யாப்பில் தசக்குறளும், பதிக அமைப்பில் திருக்குருதி குருசே பதிகமும், அங்க மாலையில் பனைப்பாடலும் கவிஞரின் படைப்பாற்றலையும் புலமைத்திறத்தையும் பறைசாற்றும் இடங்கள் உண்டு. இறையியல் சிந்தனையும் விவிலியக் கருத்துக்களும் இனிய நடையில் இலக்கிய நயங்களோடு விளங்கும் இசைப் பனுவல்கள் இவை. ஆன்மீகத்தைச் செழிக்கச் செய்து மானுடத்தை மீண்டெழச் செய்யும் ஆற்றல் இந்தப் பாக்களுக்கு உண்டு.




கிடைக்குமிடம்
குளோரி செல்வநாதன்
தாய்வீடு, 33, ஆயர் வீதி,
பர்னீஸ்புரம், காட்பாடி-632007
0416-2295370, 9442078744

# ஆசிரியர் சுவடு

கிறிஸ்துவுக்குள் அன்பான கிறிஸ்தவ வரலாற்று சுவடுகள் ஆய்விதழின் வாசகர்கள், எழுத்தாளர்கள், விளம்பரதாரர்கள் அனைவருக்கும் உயிர்தெழுந்த இயேசு கிறிஸ்துவின் நாமத்தில் அன்பின் வாழ்த்துக்கள்.

ஞானிகளை வெட்கப்படுத்தும்படி தேவன் உலகத்தில் பைத்தியமானவைகளைத் தெரிந்துகொண்டார்; பலமுள்ளவைகளை வெட்கப்படுத்தும்படி தேவன் உலகத்தில் பலவீனமானவைகளைத் தெரிந்துகொண்டார். (1கொரி. 1.27) ஞானிகளை வெட்கப்படுத்தும்படி பைத்தியமானவைகளைத் தெரிந்து கொள்ளும் தேவன், நம் மண்ணிலிருந்து அநேக ஊழியர்களை ஏற்படுத்தினார். அவர்களின் அயராத உழைப்பையும், தியாகத்தையும் இந்த மாத ஆய்விதழ் வழியாக உங்கள் கைகளில் சமர்பித்திருக்கின்றோம்.

மே மாத இதழின் கருப்பொருளாக 'திருச்சபை வரலாற்றில் இந்திய குருமார்களின் பங்கு' என்று தேர்ந்தெடுத்துள்ளோம். இந்திய குருமார்கள் ஆற்றிய பணிகளை குறித்த உங்கள் கட்டுரைகளை ஏப்ரல் 25ம் தேதிக்குள் அனுப்புமாறு அன்போடு கேட்டுக்கொள்கிறேன்.

'கிறிஸ்தவ வரலாற்று சுவடுகள்' மே மாத இதழ் நமக்கு மிகவும் முக்கியமான இதழ் ஒரு ஆண்டை நிறைவு செய்கின்றோம். தொடர்ந்து இன்னும் சிறப்பாக செயல்படவும் ஆண்டு சந்தாவை புதுப்பிக்காதவர்கள் இந்த மாதத்தில் புதுப்பித்து இவ்வூழியத்தில் எங்களோடு இணைந்து செயல்பட அன்புடன் நினைவுபடுத்துகிறேன். ஆய்விதழை உங்கள் நண்பர்களுக்கும் அறிமுகம் செய்து வைத்து இவ்வூழியத்தை தாங்கும்படி அன்போடு கேட்டுக்கொள்கிறேன்.

தேவகிருபை நம் அனைவரோடும் இருப்பதாக !

கிறிஸ்துவுக்குள்

**மன்னா செல்வகுமார்**


கிறிஸ்தவ
வரலாற்றுச் சுவடுகள்

**பதிப்பாசிரியர்** மன்னா செல்வகுமார்

**வடிவமைப்பு** சுஜித்.S





**அலுவலக முகவரி**

கிறிஸ்தவ வரலாற்றுச் சுவடுகள்,
கதவு எண் 2-2-3(4),வடக்குத்தெரு,
பங்களாச் சுரண்டை-627859,
தென்காசி மாவட்டம் (தமிழ்நாடு)
04633 290401

**விளம்பரம் மற்றும் சந்தா விபரங்களுக்கு**

christianhistorical@gmail.com
+91 90420 15221
+91 91767 80001
+91 75388 12218
04633 290401

# சீரிய சிந்தனைகொண்ட

# சாமுவேல் உபதேசியார்

அருள்திரு முனைவர் ச. இராஜசேகரன்

**உபதேசிப்பவர்கள் உபதேசியார்கள்:**

சத்தியத்தை, சமகாலத்தவருக்கும் அடுத்த தலைமுறைகளுக்கும் ஆத்தும பாரத்துடன், பண்போடும் பாசத்தோடும், சொந்த மக்களுக்கு சாட்சியுள்ள வாழ்க்கையுடன், சாமர்த்தியமாய், பொதுவாக சம்பளம் வாங்காமல், கடவுளுக்காக, ஸ்தல திருச்சபை மக்களுக்கு ஆற்றும் அருட்பணியே உபதேசியார் பணி, இப்பணிக்கு ஒப்புக்கொடுத்து ஓயாமல் ஒப்பற்ற உழைப்பைக் கொடுப்பவர்களே உபதேசியார்கள். மெத்தடிஸ்ட் மிஷனெரி சொசைட்டி மூலம் தமிழகத்தில் உள்ள தாராபுரம் பகுதியில் உள்ள மக்களுக்கு ஊழியம் செய்ய பல வெளிநாட்டு மிஷனெரிகள் வந்தனர். உள்ளூர் விசுவாசிகளே உள்ளூர் மக்களை இயேசுவிடம் வரவழைக்கவும், விசுவாச வசனங்களை விதைக்கவும், விசுவாசத்திற்குள் வந்தவர்களை, வசனத்தில் வளர்ந்து கனிகொடுக்கும் வாழ்வை வளர்த்துக்கொள்ளவும், தொடர்பணி செய்யவும் பயிற்சி கொடுத்து பணிக்கப்பட்டவர்களே இந்த உபதேசிமார்கள்.

பொதுவாக இவர்கள் ஸ்தல மிஷனெரிகள் மற்றும் குருமார்களுடன் இணைந்து ஊழியம் செய்பவர்கள். அக்காலத்தில் போதகர்கள் மிகவும் குறைவாக இருந்தமையால், திருவிருந்து, ஞானஸ்நானம் கொடுப்பதை தவிர்த்து கிராமங்கள் தோறும் வாராவாரம் சென்று ஆராதனைகளை நடத்துவதும், குடும்பங்களை சந்திப்பதும் அவர்களின் சுப மற்றும் துக்க நிகழ்வுகளில் பங்கு பெற்று போதகருடைய இடத்தை நிரப்பும் பெரும் பணியாற்றியவர்கள் உபதேசியார்கள். இவர்களில் பெரும்பாலோர் இ.எஸ்.எல்.சி படித்து, ஆசியர் பயிற்சி பெற்ற ஆசிரியர்களாகவே இருந்தார்கள். அவர்களுடைய நன்மதிப்பை மக்கள் மத்தியில் இறைப்பணி செய்ய பயன்படுத்தினார்கள். 1959ம் ஆண்டு சி.எஸ்.ஐ திருச்சி தஞ்சாவூர் திருமண்டலத்தில் மாத்திரம் ஏறக்குறைய 70 உபதேசியார்கள் இருந்திருக்கிறார்கள். அவர்களில் ஒருவரான திரு. சாமுவேல் உபதேசியாரின் வாழ்வு மற்றும் ஊழியத்தை இக்கட்டுரை சுமந்து வருகிறது.

**இளமை**

சர்டிபிகேட் படி கே. சாமுவேல் உபதேசியாரின் பிறந்த நாள் 29.1920 என்றிருந்தாலும் அவர் 2 அல்லது 3 ஆண்டுகளுக்கு முன்பே பிறந்தவர் என்று அவரே சொல்லியிருக்கிறார். சிறு வயதிலேயே தகப்பனை இழந்தவர் தாயாரின் அரவணைப்பிலும் போதனையிலும் மூத்த சகோதரியுடன் வளர்க்கப்பட்டார். அவரது 18வது வயதில் 8ம் வகுப்பு (இ.எஸ்.எல்.சி) முடித்து, ஆசிரியர் பயிற்சி பெற்று அவரது 22 வயதிலேயே ஆரம்பப்பள்ளியின் தலைமை ஆசிரியராக 9 ஆண்டுகள் பணி செய்தார். பணி செய்துகொண்டிருக்கும் போதே, மாலை நேரங்களில், படித்த இளைஞர்களைக் கூட்டிக்கொண்டு அருகில் கிராமங்களுக்கு சென்று ஊழியம் செய்து வந்தார். இவருடைய ஊழியவாஞ்சையைக் கண்ட வெள்ளைக்கார மிஷனெரி ஒருவர் 'நீ ஏன் முழுநேர ஊழியத்திற்கு வரக்கூடாது?' என்று கேட்க, இதற்காகவே காத்திருந்தது போலவும், அதனை தெய்வ அழைப்பாகவும் ஏற்று, அடுத்தநாளே ஆசிரியப்பணியை இராஜினாமா செய்தார். 1951-53 வரை மதுரை பசுமலையில் நற்செய்தி அறிவிக்கும் பயிற்சி பள்ளியில் படித்து. தொடர்ந்து 37 ஆண்டுகள் உபதேசியாராக தாராபுரம் பகுதியில் அரும்பணி ஆற்றினார். 8ம் வகுப்பு வரை படித்த சாமுவேல் ஐயாவின் மனைவி, பைபிள் வுமன் கோர்ஸ் படித்து நல்ல குடும்பத்தலைவியாக, பெண்கள் மத்தியில் ஊழியம் செய்துக்கொண்டிருந்தார். இப்போது வயது மூப்பின் பெலவீனத்தோடு வாழ்ந்துவருகிறார்.



**இனிமை**

சாமுவேல் உபதேசியாரின் ஊழிய நாட்டத்தையும் அயராத உழைப்பையும் கண்ட வெள்ளைக்கார மிஷனெரி ஒருவர் இங்கிலாந்திருந்து கொண்டு வந்திருந்த 24இன்ச் சைக்கிளை இவருக்குக் கொடுத்தார். நடந்தும் பேருந்திலும் சென்று ஊழியம் செய்து வந்தவருக்கு வேகத்தைக் கூட்டி ஊக்கத்தைக் கொடுத்தது அந்த சைக்கிள். சைக்கிளில் இரண்டு பேக் எப்போதும் இருக்கும். ஒன்றில் பைபிள், கீர்த்தனைப் பாட்டு புத்தகம், மற்றும் பிரசங்க நோட், மற்றொன்றில் சைக்கிள் பஞ்சரானால் ஒட்டுவதற்குத் தேவையானப் பொருட்களுடன் காற்று அடிக்கும் பம்ப் இருக்கும். எங்கு சென்றாலும் 20 - 30 கி.மீ தூரம் வரை சைக்கிளிலேயே செல்வார். அமராவதி ஆற்றின் ஒரு கரையிலிருந்து மறுபக்கம் நீச்சலடித்து கடந்து செல்லும் ஆற்றலும் சுறுசுறுப்புமிக்கவர். அதனால் அவருடைய ஆரோக்கியத்தைக் குறித்து மிகவும் அக்கறையுடையவராய் உணவு கட்டுப்பாட்டுடன் இருப்பார். திருச்சபை மக்கள் அனைவரின்

பெயரை நினைவில் வைத்துக்கொள்ளும் நினைவாற்றலுடையவர், அனைவரிடமும் நல்லுறவை வளர்த்துக்கொள்ளும் நற்பண்புகளையுடையவர். கடின உழைப்பாளி.

**முதுமை**

அக்காலங்களில், மக்கள் பகல் முழுவதும் கூலி வேலைப்பார்த்துவிட்டு மாலை நேரங்களில் வீடு திரும்பி சமையல் செய்து சாப்பிட்ட பின்பு, இரவு 8 மணிக்கு ஆராதனைக்கு வருவார்கள். பொதுவாக கிராமங்களில் சர்ச் நடத்துவதற்கென பிரத்தியேக இடம் இல்லாததால் பள்ளிகளில் தான் ஆராதனை நடத்தி வந்தார்கள். சாமுவேல் ஐயா மாலை 6 மணிக்கே வந்து, வீடு வீடாகச் சென்று அனைவரையும் விசாரித்து, ஆராதனைக்கு வரும்படி அழைப்பார். வீட்டிலிருந்து கொண்டுவந்த உணவை சாப்பிட்டுவிட்டு ஆராதனை நடத்துவார். சொல்லிக்கொள்ளும் அளவு பாடத்தெரியாவிட்டாலும், கீர்த்தனைகளில் உள்ள இராகங்களை அப்படியே மக்களுக்குப் பாடி அநேகப் புது பாடல்களை ஆராதனைகளில் சொல்லிக்கொடுப்பார். பிரசங்கத்தை கேட்பவர்களுக்கு அலுப்புத்தட்டாதபடி வேதத்தை மிகவும் சுவாரஸ்யமாக 2 மணிநேர ஆராதனையில் 1 மணிநேரம் நிதானமாக பிரசங்கம் செய்வார். அவருடைய பிரசங்கத்தில் அனைத்துவிதமான காணிக்கைகள் பற்றி போதிப்பார். குறிப்பாக பிடி அரிசி கொடுப்பதை போதித்தார். இன்றும் அப்போதனையின் விளைவாக அநேக திருச்சபைகளில் பிடி அரிசி கொடுக்கும் வழக்கம் பின்பற்றப்படுகிறது.

அக்காலத்தில் பெரும்பாலும் தாராபுரம் பகுதியில் உள்ள சக்கிலியர் மற்றும் பறையர்கள் கவுன்டர்களால் ஜாதிப்பெயரில் சமூகத்திலும், அரசியலிலும், பொருளாதாரத்திலும் மற்றும் சமயத்திலும் ஒடுக்கப்பட்டிருந்தார்கள். கிறிஸ்துவின் அன்பு ஆதரவும் மிஷனெரிகள் மூலம் இவர்களுக்கு கிடைத்தபோது கூட்டம் கூட்டமாக அனைத்திலிருந்தும் விடுதலைக்கொடுக்கும் கிறிஸ்தவத்தைத் தழுவினார்கள். ஆகவே ஆன்மிக அறிவும், பின்மாற்றமும் அவர்களிடையே பெருமளவில் இருந்தது தவிர்க்கமுடியாதது. சாமுவேல் உபதேசியார் விசுவாசிகளின் வேதஅறிவை வளர்த்தும் விசுவாசத்தில் பின்மாற்றம் அடைந்தவர்களை திருச்சபைக்கு அழைத்துவரும் பெரும் பொறுப்பை மனதார செய்தார். ஏறக்குறைய 9 சேகரத்திலும் இப்பணியை செம்மையாக செய்து முடித்தார்.

**மகிமை**

1979ஆம் ஆண்டு பேராயர் சாலமோன் துரைசாமி, அவரை திருச்சியில் உள்ள சி.எஸ்.ஐ. ரிட்ரிட் சென்டருக்கு போய் அதனை கவனித்துக்கொள்ளுங்கள் என்று, பட்டணத்திற்கு குடிபெயரும் ஒரு நல்ல வாய்ப்பைக் கொடுத்தாலும், எங்கும் சுற்றித்திரிந்து மக்களுக்கு நற்செய்தி அறிவிக்கும் பணிக்காக அழைக்கப்பட்ட நான் நான்குபுறமும் அடைக்கப்பட்ட வேலிக்குள் முடங்கிக்கிடக்க விரும்பவில்லை என்று நேரடியாகவே அவரிடம் சொல்லி அந்த வாய்ப்பை ஏற்க மறுத்துவிட்டார். 1979-81 அவரை எக்சிக்யூட்டிவ் அங்கத்தினராக பேராயரின் அதிகாரத்தில் நேரடியாக அமர்த்தப்பட்டு கௌரவப்படுத்தப்பட்டார். இதுவரை எவரும் இப்படிப்பட்ட கௌரவத்தை பெற்றதில்லை. பல ஆண்டுகளாக உபதேசியார்களுக்கு செயலாளர் மற்றும் பொருளாளராக நிர்வாகப் பொறுப்பிலும் அவர்களின் ஆவிக்குரிய வளர்ச்சிக்காவும் பெரும்பங்களித்திருக்கிறார். பேராயத்தின் கவுன்சில் கூட்டங்களில் பலமுறை பங்கேற்றிருக்கிறார். 1990ல் பணி ஓய்வு பெற்றாலும், தாராபுரத்தில் குடியமர்ந்து, அங்குள்ள ஸ்தல போதகரோடு கிராமங்களில் ஊழியம் செய்தார். தாராபுரத்தில் உள்ள எல்லிஸ் நினைவு கல்கோவில் கட்டுவதற்கு கல்சுமந்தவர். உணவு, உடை, உறைவிடத்தை மிகவும் எளிமையாகக்கொண்டவர். சீரிய சிந்தனைக்கொண்டவர். தன்னார்வமாக, தாழ்மையாக, தியாகத்தோடு, அறிவு மற்றும் நற்குணங்களின் தரத்தோடு ஊழியம் செய்து, உண்மையும் உத்தமுமான ஊழியராக எந்தவித நோயும் இல்லாமல், வயது மூப்பு காரணமாக, ஒரு சில நாட்கள் சரீர உபாதைகளை அனுபவித்து, இந்த அநித்தியமான உலகைவிட்டு 5.4.2013 அன்று நித்தியத்திற்குள் பிரவேசித்தார். விளையும்பயிர் முளையிலே தெரியும் என்பதைப் போல, இவர் பள்ளிப்படிப்பு முடித்து வெளியேறும் போது கொடுக்கப்பட்ட சர்டிபிகேட்டில் 'நான் ஒரு நற்செய்திப்பணியாளராக விரும்புகிறேன்' என்று சொன்னதை எழுதிக்கொடுத்திருக்கிறார்கள். சிறுவயதிலேயே தந்தை இல்லாவிட்டாலும் தாயாரின் கிறிஸ்தவ அன்பும் பராமரிப்பும் இவரை திருத்தந்தை பணிக்கு ஒப்புக்கொடுக்க ஏவியிருக்கிறது. அது கடவுளின் ஆவியால் அவரில் வளர்ந்து ஏற்ற காலத்தில் முளைத்து இன்றும் பல்லாயிரம் கிறிஸ்தவ விசுவாசிகள் மற்றும் அவருடைய குடும்பத்தார் அனைவரும் அதன் நற்பலன்களை நினைவிலும் வாழ்விலும் அனுபவிக்கக் காரணமாயிருக்கிறது. 5 பிள்ளைகளையும் நன்கு படிக்கவைத்து தரமான கிறிஸ்தவர்களாகவும் பொருளாதார தன்னிறைவுப் பெற்றவர்களாகவும் உருவாக்கியிருக்கிறார்.

ஆயர்கள் இல்லாத இடத்தை நிரப்பிய இவர்களின் ஊழியம் போற்றுதற்குரியது. இக்காலத்தில் போதிய ஆயர்கள் இருப்பதால் உபதேசியார்களின் எண்ணிக்கை குறைந்து காணப்படுகிறது. உபதேசியார்களின் ஊழியத்தால் அவர்கள் குடும்பங்கள் செழிக்க கடவுள் உதவிபுரிகிறார் என்பதற்கு அநேக சான்றுகள் உள்ளன. திருச்சி தஞ்சாவூர் திருமண்டலத்தின் முன்னாள் பேராயர்கள் பால்ராஜ் மற்றும் பால் வசந்தகுமார் அவர்களின் தகப்பனார்கள் உபதேசியார்களாக ஊழியம் செய்து நற்பெயர் பெற்றிருக்கிறார்கள். பல்வேறு ஆயர்களின் தகப்பன்மார்கள் உபதேசியார்களாக இருந்திருக்கிறார்கள். உபதேசியார்கள் பேராயர்களையும் ஆயர்களையும் உருவாக்கினவர்களாக மாத்திரம் அல்லாமல், பிற்காலத்தில் ஆயர்களால் அவர்களுடைய வாழ்வையும் ஊழியத்தையும் போற்றும் வகையில் அவர்களுடைய வாழ்க்கை வரலாறுகளை எழுதும் நிலைக்கு உயர்த்தப்பட்டிருக்கிறார்கள் என்பது நிதர்சனமான உண்மை . சாமுவேல் உபதேசியாரின் மூன்று மகன்கள் திருச்சி தஞ்சை திருமண்டலத்தில் முக்கியப் பொறுப்புகளை ஏற்று திருச்சபை பணியாற்றுகிறார்கள். அவர்களில் மூத்தவர் திரு. இராஜேந்திரன் அவர்கள் இன்று சி.எஸ்.ஐ. திருச்சி தஞ்சை பேராயத்தின் பொருளாளராக நற்பணி செய்துகொண்டிருக்கிறார். இவர், 'Simple living and high thinking are the virtues of great people" என்ற வோர்ட்ஸ் வொர்த்தின் கூற்றை தன் தகப்பனுக்கு புகழ் அஞ்சலியாக சூட்டுகிறார்.

மோ . ஜோ, முதலூர்

# திரும்பிப் பார்ப்போம்!

எனக்கு
எப்போதுமே ஒரு
பெரிய வருத்தம் உண்டு!
கனம். கால்டுவெல்,
கனம். போப்,
கனம். மார்காஷியஸ்,
கனம். ஜான் தாமஸ்...

இப்படி வெளிநாட்டில் இருந்து நம் பகுதிக்கு வந்து உண்மையாய், தியாகமாய், தரிசனத்தோடு ஊழியம் செய்த மிஷனரிகளை நாம் இன்றும் நினைவுகூர்ந்து அவர்களைக் கொண்டாடுகிறோம். ஆனால், நம் பகுதியில் பிறந்து, இங்கேயே வளர்ந்து, தரிசனத்தோடு ஆண்டவருக்காய் வல்லமையாய் ஊழியம் செய்த நம்மவர்களை நாம் எண்ணிபார்ப்பதில்லை. இது எனக்கு வருத்தம்! இவர்கள் ஆண்டவரின் கிருபையால் வெளிநாட்டு மிஷனரிகளால் உருவாக்கப்பட்டவர்கள் என்றாலும், அனைவருக்குள்ளும் செயல்படுகிற ஒரே ஆவியானவரால், மிஷனரிகளுக்கு இணையாக இவர்களும் தேவனுக்காய் பெரிய காரியங்களைச் சாதித்திருக்கின்றனர்.

நம் மண்ணின் மைந்தன், தூத்துக்குடி நாசரேத் திருமண்டலத்தின் முதல் உபதேசியார், முதல் கிறிஸ்தவ கிராமத்தை (முதலூரை) உருவாக்கியர், சின்னமுத்து என்ற தாவீது சுந்தரானந்தனைப் பற்றி நாம் இன்று அறிந்துகொள்ளலாம். அவர் 1775ஆம் ஆண்டு, தூத்துக்குடி மாவட்டம் காலன்குடி (சாத்தான்குளம் அருகில்) என்ற ஊரில் பிறந்தார். சிறிய வயதிலேயே பெற்றோரை இழந்ததால், அவரும், அவரது சகோதரியும், விஜயராமபுரத்திலிருந்த அவரது அத்தையால் வளர்க்கப்பட்டனர். திடகாத்திரமான வாலிபனான சின்னமுத்துவுக்கு ஜோதிடம், தத்துவம், மருத்துவம் சார்ந்த பல காரியங்களை அறிந்துகொள்ளவேண்டும் என்ற ஆர்வம் இருந்தது. இது அவரது அத்தைக்குப் பிடிக்கவில்லை. ஒருமுறை, கொடுத்த வேலையை செய்யவில்லை என்ற காரணத்திற்காய் அவரது அத்தை அவரை தயிர்மத்தால் அடித்துவிட, மிகவும் வருத்தமடைந்த சின்னமுத்து, சாத்தான்குளம் சென்று கருப்பட்டி வண்டியில் ஏறி, ராஜபாளையம் சென்றடைந்தார் (வருடம் 1790). 1793ஆம் ஆண்டு தஞ்சாவூர் சென்ற அவருக்கு சுவார்ட்ஸ் ஐயருடன் தொடர்பு ஏற்பட்டது. அவர் மூலம் இயேசுவை அறிந்துகொண்டு, தனது இருபதாவது வயதில் ஞானஸ்நானம் பெற்றார். திருநெல்வேலி பகுதியில் ஊழியம் செய்ய ஊழியர் தேவைப்பட்டதால், சுவார்ட்ஸ் ஐயர் தாவீதிற்கு ஊழியபயிற்சி கொடுத்து, அவரை குளோரிந்தா அம்மாவிடம் அனுப்பினார். அங்கிருந்த பள்ளியில் குளோரிந்தா அம்மாவோடு சிலகாலம் ஊழியம் செய்துவிட்டு, விஜயராமபுரம் சென்று தன் உறவினர்களிடமும், இனத்தாரிடமும் இயேசுவைப் பற்றி அறிவித்தார். அங்கிருந்து பாளையம்கோட்டை திரும்பி, 1797ஆம் ஆண்டு, மார்ச் 22ஆம் தேதி, சத்தியநாதனுடன் மீண்டும் விஜயராமபுரத்திற்கு வந்தார். அங்கு, சத்தியநாதனோடு இணைந்து 'நாடார்' இனமக்கள் மத்தியில் ஊழியம் செய்தார். 16 நாட்கள் ஊழியத்தின் விளைவாக, நான்கு குடும்பங்கள் இயேசுவை ஏற்றுக்கொண்டனர்.

தொடர் ஊழியத்தின் விளைவாக விஜயராமபுரம் மற்றும் அதைச் சுற்றிய கிராமங்களில் கிறிஸ்துவை ஏற்றுக்கொண்டவர்களின் எண்ணிக்கை பெருகியது. புதிதாய் கிறிஸ்துவை ஏற்றுக்கொண்டவர்கள் கிராமத்தினரிடமிருந்து துன்பத்தை சகிக்க வேண்டியிருந்தது. விஜயராமபுர ஆலயம் கிறிஸ்தவ எதிர்ப்பாளர்களால் இரண்டு முறை தீக்கிரையாக்கப்பட்டது. நிந்தைகளும், கேலிப்பேச்சுகளும் பெருகின. இந்த இடர்களில் இருந்து நீங்கி, கிறிஸ்தவர்கள் நிம்மதியாக வாழ, கிறிஸ்தவர்களுக்காய் தனி கிராமம் அமைப்பதே தீர்வு என்று தரிசனவாதி தாவீது எண்ணினார். இராணுவ கேப்டன் எவரட் மற்றும் குளோரிந்தா அம்மாவின் உதவியோடு ஒரு நிலத்தை வாங்கி, கிணறு தோண்டி, கிராமத்தை உருவாக்கி, துன்புறுத்தப்பட்ட கிறிஸ்தவர்களை அங்குக் குடியேற்றி, சிறிய ஜெப அறையைக் கட்டி 1799ஆம் ஆண்டு பிரதிஷ்டை செய்தார். முதல் கிறிஸ்தவ கிராமமாகிய இவ்வூருக்கு 'முதலூர்' என்று பெயர்சூட்டினார். தாவீது முதலூரின் உபதேசியாராகப் பணியாற்றினார். 1800ஆம் ஆண்டு முதலூரின் மக்கள்தொகை 200ஆக பெருகியது. தாவீதின் அயராத உழைப்பால் அவரது இனத்தார் அநேகர் இயேசுவை ஏற்றுக்கொண்டனர். 1802 ஏப்ரல்-1803 ஜூன் இந்தக்காலத்தில், சத்தியநாதன் 70 கிராமங்களைச் சேர்ந்த 5382 பேருக்கு ஞானஸ்நானம் கொடுத்தார்.

இது சாதனைதானே! மீண்டும் துன்பக்காலம் ஆரம்பமானது. 1803 ஆண்டு, மே 22 ஆம் நாள் மீண்டும் முதலூர் ஆலயம் தீக்கிரையாக்கப்பட்டது.

கிறிஸ்தவர்கள் காரணமின்றி துன்பப்படுத்தப்பட்டனர். இதைத் தாங்கிக்கொள்ள முடியாத தாவீது தடிக்கம்புக்காரர் என்ற கிறிஸ்தவ இளைஞர் குழுவை உருவாக்கினார். எங்கெல்லாம் கிறிஸ்தவர்கள் துன்புறுத்தப்பட்டனரோ, 'தடிக்கம்புக்காரர்' அங்கு

சென்று கிறிஸ்தவர்களுக்கு பாதுகாப்பு அளித்துவிட்டு திரும்புவர். தாவீதின் இந்த செயல் அவருக்கும், உடன் ஊழியர்களுக்கும் இடையே கருத்துவேறுபாட்டை உருவாக்கியது. தாவீது முதலூரில் இருந்து 'குட்டம்' என்ற கிராமத்திற்கு ரிங்கல் தௌபேயால் பணிமாற்றம் செய்யப்பட்டார். 1806ஆம் ஆண்டு தாவீது பெத்லகேம் என்ற ஊரில் மர்மமான முறையில் இறந்துகிடந்தார். குட்டம் கிராமத்தினர் அவருக்கு உணவில் விஷம் கலந்து கொடுத்ததால் அவர் மரித்துப்போனார் என்று சொல்லப்படுகிறது. காரணம் எதுவாயிருந்தாலும் ஒரு தலைசிறந்த ஊழியரை இளம் வயதிலேயே திருச்சபை இழந்துவிட்டது.

அன்பான வாசகர்களே! தாவீது சுந்தரானந்தத்திற்காக தேவனுக்கு நன்றி செலுத்துவோம். அவரது தரிசனமும், ஊழிய வேட்கையும் நம்மையும் பற்றிப்பிடிக்கட்டும். நம் இனத்தாரை, நம் மொழி பேசும் மக்களை, நம் தேசமக்களை கிறிஸ்துவுக்காய் ஆதாயம் செய்ய முன்னேறுவோம்! ஜெயகிறிஸ்து முன்செல்கிறார்! வாலிபரே! உடலுறுதியும், புத்திக்கூர்மையும் நிறைந்த 21 வயது இளைஞனாகிய தாவீது உலக வேலையைத் தெரிந்தெடுக்காமல், உன்னதரின் பணியைத் தெரிந்தெடுத்ததால் ஒரு கிறிஸ்தவ கிராமம் உருவாகி அநேகருக்கு ஆசீர்வாதமாக இருக்கிறது. படித்துப் பட்டம் பெற்றுள்ள நீங்கள் இன்று எதை தெரிந்தெடுக்கிறீர்கள்? ஊழியர்கள் சென்ற பாதையில் நாமும் செல்வதே உண்மையான நினைவுகூருதல், ஆமாம் அதுவே கொண்டாடுதல்! மற்றவையெல்லாம் பொழுதுபோக்குகளே!

**ஆண்டவா உந்தன் சேவைக்கடியேன் அர்ப்பணம் செய்ய**
**தூண்டும் உன் ஆவி அருள்வாய்!**

# உபதேசியார்களை உருவாக்கிய ரேனியஸ்

**ஜெபராஜ் I J**

நெல்லை மண்ணில் கிறிஸ்து மார்க்கம் பரவ பெருமுயற்சி செய்து, அதில் வெற்றி பெற்றவர்களில் கனம். ரேனியஸ் ஐயர் மிகவும் முக்கியமானவர். அவருடைய அரும்பெரும் முயற்சியால் இன்றும் கிறிஸ்தவ மார்க்கம் நெல்லை மண்ணில் சுடராக பிரகாசித்து கொண்டு இருக்கிறது. நெல்லையில் தடம்பதித்த கிறிஸ்தவ மார்க்கத்தை வளர்த்தெடுக்கவும், திருச்சபைகளை பலப்படுத்தவும் யாரை அனுப்பலாம் என்று சென்னை சி.எம்.எஸ். கமிட்டி குழப்பத்தில் இருந்தபோது, ரேனியஸ் ஐயரை அனுப்பலாம் என முடிவெடுத்தனர். பல்வேறு சூழ்நிலைகளை தாண்டி கனம் ரேனியஸ் ஐயரவர்கள் 1820ம் ஆண்டு ஜூலை மாதம் 7ம் தேதி நெல்லை வந்தடைந்தார்.

தன்னுடைய ஊழியத்தில் ரேனியஸ் ஐயர் சந்தித்த பல்வேறு சோதனைகளிலும் வேதனைகளிலும் அவருக்கு உறுதுணையாக இருந்தது உபதேசியார்களே. ரேனியஸ் ஐயர் கிராமங்களில் சென்று தன் ஊழியங்களை நிறைவேற்றிய பின்னர், தன் உபதேசியார்களை அனுப்பி அந்த கிராம மக்களை விசுவாசத்தில் வளர்த்தார். அவர்கள் கிறிஸ்து மார்க்கத்தை உபதேசியார்கள் மூலமாக முழுமையாக கற்று அறிந்த பின்னரே அவர்களை ஞானஸ்நானம் வழியாக கிறிஸ்து மார்க்கத்தில் சேர்த்துக் கொண்டார். உயர்சாதி மக்களாலும், நிலச்சுவான்தாரர்களாலும், ஜமீன்தாரர்களாலும் திருச்சபைகள் துன்புறுத்தப்பட்ட போதும், மக்கள் கொள்ளை நோயால் பாதிக்கப்பட்ட போதும் உபதேசியார்களோடு இணைந்து திருச்சபைகளை விசுவாசத்தில் பலப்படுத்தினார். நெல்லை மண்ணில் ரேனியஸ் ஐயர் பணியாற்றிய சுமார் 18 ஆண்டுகளில் 371 திருச்சபைகளையும், 107 பள்ளிகளையும், சுரண்டை, நல்லூர், டோனாவூர், கடாட்சபுரம், அடைக்கலாபுரம், அன்பின் நகரம், மெஞ்ஞானபுரம் உள்பட பல்வேறு கிராமங்களையும் தொடங்கிய ரேனியஸ் ஐயரின் பணிகளில் உபதேசியார்களின் பங்கு இன்றியமையாதது ஆகும். லாசரு உபதேசியார், தாவீது உபதேசியார் ஆகியோர் ரேனியஸ் ஐயரின் ஊழியத்தின் முக்கிய அங்கமாக இருந்திருக்கின்றனர். ஒரு வரலாற்று நிகழ்வினை இங்கு நினைவுபடுத்த விரும்புகிறேன். தகிக்கும் வெப்பக் காற்றில் தகித்த கடற்கரைப் பகுதி உவரி. எஸ்.பி.ஜி. மூலம் திருச்சபை நிறுவப்பட்டு இருந்தது. ஆனாலும் அச்சபையானது ஆவிக்குரிய வளர்ச்சியற்று மந்த நிலையில் காணப்பட்டது. எஸ்.பி.ஜி. சபையை விசாரிக்கவும், வழிநடத்தவும் மிஷனரி ஒருவர் கூட இல்லாத நிலை திருநெல்வேலியில் இருந்தது. எனவே ரேனியஸ் ஐயரே எஸ்.பி.ஜி. சபையின் பொறுப்பையும் ஏற்று நடத்திக் கொண்டு இருந்தார். உவரியில் இருந்த நாற்பது குடும்பத்தினர் சத்திய மார்க்கத்தில் இணைய விரும்பி ரேனியஸ் ஐயரை சந்திக்க இரண்டு மூப்பரை அனுப்பினர். இதனை மகிழ்வுடன் ஏற்ற ரேனியஸ் ஐயர் உடனே தாவீது உபதேசியாரை அங்கு அனுப்பி, அங்கிருந்த சூழலை தெரிந்து கொண்டார். அவர்களை ஏற்றுக் கொண்டு விசுவாசத்தில் பலப்படுத்தினார். எஸ்.பி.ஜி. மிஷனரிகள் வந்த பின்னர் அவர் வைத்திருந்த எஸ்.பி.ஜி. சம்மந்தப்பட்ட அனைத்து பொறுப்புகளையும் ஒப்படைத்தார். அதோடு கூட தாவீது உபதேசியாரின் உதவியால் தேற்றப்பட்டு ஒளியூட்டப்பட்ட உவரி திருச்சபையையும் ஒப்படைத்தார். ரேனியஸ் ஐயர் தன் ஊழியத்தை தன் உடன் ஊழியர்களோடு இணைந்து நிறைவேற்றினார். அநேக உபதேசியார்களை உருவாக்கி திருச்சபைகளை வளர்த்தார்.

இப்படிப்பட்ட உபதேசியார்களின் அர்ப்பணிப்பாலும், தியாகத்தாலும், உழைப்பாலும் வளர்ந்த நம் கிராமங்களும், திருச்சபைகளும் மறவாது அவர்களை நினைவுகூற வேண்டும்.

தமிழ் நாட்டின் தனிப்பெரும் நாவலாசிரியர்

## அ மாதவையா அவர்களின்

# கிளாரிந்தா

(வரலாற்று நெடுந்தொடர்)

அமரர் அ. மாதவையாவின் கிளாரிந்தா 1915ம் ஆண்டு கிளாரிந்தா ஆங்கில பதிப்பில் வெளியாயிற்று. மாதவையா தமது படைப்பை மகாகனம் திரு. ஸ்ரீநிவாச சாஸ்திரியார் அவர்களுக்கு (Right Honourable Mr. Srinivasa Sastri) சமர்ப்பணஞ் செய்திருக்கின்றார். தமிழ் நாட்டில் வெளி வந்த முதல் வரலாற்று நாவல் இதுவே. தமிழில் கிறிஸ்தவ இலக்கிய சங்கம் 1976 ல் தமிழில் வெளியிட்டது. தமிழாக்கம் செய்தவர் சரோஜினி பாக்கிய முத்து அவர்கள்.

இந்த நாவலில் அடங்கிய வரலாற்று நிகழ்ச்சிகள் மிக அண்மைக் காலத்தே நடந்தவையாகும். ஆங்கிலேயரும், பிரெஞ்சுக்காரரும் தங்கள் செல்வாக்கைத் தமிழ் நாட்டிலும் இந்தியாவிலும் நிலைநாட்ட முயன்ற காலமாகும். தஞ்சாவூரில் அப்போது மகராஷ்டிர மன்னரின் ஆட்சி இருந்துவந்தது. தரங்கம்பாடியில் சீகன்பால்கு (Zeiganbalg) என்ற ஐரோப்பிய புராட்டஸ்டாண்டு மிஷனெரி வந்திறங்கி புராட்டஸ்டாண்டு கிறிஸ்தவப் பயிரை நட்டுச் சென்றபின், அதற்கு நீர்ப் பாய்ச்ச கிறிஸ்டியன் பிரடெரிக் சுவார்ட்ஸ் (Christian Frederick Schwartz) என்ற ஜெர்மானிய மிஷனெரி எஸ். பி ஸி. கே. (S.P. C. K) சங்கத்தின் சார்பாக சோழமண்டலத்திற்கு வந்து சேர்ந்தார். அவர் இந்த நாவலில் ஒரு கதாபாத்திரமாக வருவது சிறப்பான அம்சமாகும். தொடர்ந்து வரலாற்று சங்க மாத இதழில் வெளியிடுவதில் மகிழ்ச்சி அடைகின்றோம்.

### தஞ்சைக் கோட்டையில் பரபரப்பு

தஞ்சாவூர்க் கோட்டையின் தெற்கு வாசல் நோக்கி அந்த நான்கு குதிரைகளும் பாய்ந்து வந்துகொண்டிருந்தன. அதன்மீது சவாரி செய்துவந்த வீரர்களிடையே ஒரே பரபரப்பு! ஏதோ முக்கிய செய்தியாகத்தான் இருக்க வேண்டும். ஒருவேளை தஞ்சைத் தளபதி முராரிராவுக்கும் இராமநாதபுரம் தளவாய்க்கும் இடையே நடைபெற்ற சண்டையைப்பற்றி இருக்குமோ?

இந்திய நாடே அரசியல் குழப்பத்தில் ஆழ்ந்திருந்த காலம் அது. அப்போதுதான் நடந்து முடிந்திருந்த சான்தோம் சண்டை மக்களிடையே பீதியைக் கிளப்பிவிட்டிருந்தது.

1746ம் ஆண்டு நவம்பர் நாலாம் தேதி. அடையாற்றங் கரையில் கர்நாடக நவாபின் வாரிசு மயூஸ்கான் தலைமையில் இந்தியப் படைக்கும் என்ஜினியர் பராடிஸ் தலைமையில் பிரெஞ்சுப் படைக்கும் இடையே கடும் போர் மூண்டது. நவாபின் பக்கத்தில் பத்தாயிரம் வீரர்கள் துப்பாக்கி ஏந்திப் போரிட்டனர். பிரெஞ்சுப் படையிலோ இருநூற்றைம்பது ஐரோப்பிய வீரர்களும், எழுநூறு சிப்பாய்கள் மட்டுமே இருந்தார்கள். என்றாலும் ஐரோப்பிய வீரர்களின் துணிவுக்கு முன்னால் இந்தியப் படை புறமுதுகு காட்டி ஓடவேண்டியதிருந்தது.

இப்போர் இந்திய வரலாற்றில் ஒரு புதுத் திருப்பத்தை ஏற்படுத்தியது. வாணிபம் செய்ய வந்திருந்த ஐரோப்பியரின் செல்வாக்கை அதிகரித்தது. அவர்கள் கை ஓங்கியது. இந்திய மன்னர்களோ தங்களுக்குள்ளேயே சண்டையிட்டுப் பிரிய ஆரம்பித்தனர். இந்த வேளையில் தஞ்சைக்கும் இராமநாதபுரத்துக்கும் இடையே நடந்த சண்டை முக்கியத்துவம் பெற்றதில் வியப்பில்லை!

தஞ்சைக் கோட்டை மதிலில் நின்றுகொண்டிருந்த காவற்படைத் தலைவர் ஹவில் தார் ரகோஜிதான் அவர்களை முதலாவதாகப் பார்த்தார்.

அந்தக் கிழவர் அருகிலிருந்த வீரனிடம், 'ஷெர்கான்! ஒரு புழுதிப்படலம் தெரிகிறதே. குதிரை வீரர்கள் சிலர் கடும் வேகமாக இங்கு வருகிறார்கள். ஏதோ அவசர காரியமாக இருக்கும் போலிருக்கிறது. அவர்கள் யாரென்று இப்போது தெரியவில்லை.. ஆனால் என்ன? யாராயிருந்தாலும் உஷாராக இருக்கவேண்டும்' என்று கட்டளையிட்டார்.

அருகிலிருந்த மற்றொரு வீரனிடம் திரும்பி, 'நாயக், காவல் வீரரை எச்சரித்து வையும்,' என்றார்.

ஆமாம்! இரைதேடும் கழுகின் கண்களைவிட உங்கள் கண்கள் கூர்மையாகத்தான் இருக்கவேண்டும். நான் கீழே சென்று எச்சரித்து வருகிறேன்' என்று அவசரமாக இறங்கினார் நாயக்

'ரகோஜியின் கண்களுக்குப் புலப்படாதது ஏதும் உண்டோ ?' என்று பெருமிதத்துடன் சொல்லிய வண்ணம் ஹவில்தார் குதிரைகள் வரும் திசையை உற்றுப்பார்த்தார். சில நிமிடங்களில் நாயக் திரும்பிவிட்டார்.

'காவற்படையினரை எச்சரித்துவிட்டேன். சத்திரக்கார னிடமும் ஒரு வார்த்தை சொல்லிவைத்திருக்கிறேன். வருகிற வர்கள் ஒருவேளை அந்நியராய் இருக்கலாமல்லவா?' என்றார் நாயக்.

மிகவும் நல்லது.' என்று பாராட்டினார் ஹவில்தார் ரகோஜி.

ரகோஜி ஒரு மராட்டியர் , நல்ல வீரர். வலிமையும் உரமும் வாய்ந்த கட்டான உடல் அம்பு போல் நிமிர்ந்திருந்தது. இவர் மிகவும் குள்ளமாக இருந்தார். வயது 64 ஆகியிருந்தாலும் இளமையாகத் தோற்றம் அளித்தார். கரடுமுரடான அவர் முகத்தில் வலது கண்ணுக்குக் கீழே இருந்த ஒரு நீண்ட வடு, அவர் ஆண்மையை இன்னும் எடுப்பாகக் காட்டிற்று. இடக்கண் மாறுகண். அந்த மாறுகண் பார்வைதான் அவர் கலகலப்பாகப் பழகுபவர் என்பதற்கு அடையாளம். மற்றப் படி மொத்தத்தில் சற்றுக் கடுமையானவராகத்தான் தோற்ற மளித்தார். அவர் அணிந்திருந்த வெள்ளைச் சொக்காயின் ஓரங்களில் சிவப்பு வெல்வெட் துணி வைத்துத் தைத்திருந்தது. அதில் கயிறு இணைத்து உடலை வளைத்துச் சுற்றி முடிச்சுகள் போட்டிருந்தார். இறுக்கமான கால்சராய், சப்பாத்து வடிவத்தில் மராட்டியத் தலைப்பாகை; அதில் அவர் அந்தஸ்தைக் காட்டும் விருது! கைகளில் வளைந்த குட்டையான வாளும், அலங்காரக் கைப்பிடியுள்ள குத்துவாளும் மின்னிக் கொண்டிருந்தன .

நாயக்கின் உடையும் அதுபோலவே தான் இருந்தது. ஆனால் கால்சராய் தொளதொளப்பாக இருந்தது. அவர் அணிந் திருந்த தலைக்கவசம் அவரை ஒரு முசல்மான் என்று காட்டிற்று. வாள்பிடியில் அலங்காரம் எதுவும் இல்லை. ஒல்லியாகவும் உயரமாகவும் வளர்ந்திருந்த அந்த இளைஞர், தோற்றத்தில் அந்த அநுபவசாலிக் கிழவருக்கு நேர்மாறாக இருந்தார். - ' அவர்களைப் பார்த்தால் அறந்தாங்கிக் கோட்டையிலிருந்து வருவதுபோலத் தோன்றுகிறது. நமது பண்டிதராவின் மகன், வீர மறவர்களின் தளபதியைப் பிய்த்து வாங்கியிருப்பார்–' என்றார் நாயக்.

ஹவில்தார் இலேசாகச் சிரித்தார். ஷெர்கான், உமக்கு எப்போதுமே அளவுக்கு மீறிய நம்பிக்கை. உமது உலக அறிவு, நமது சங்கீத அறிவுமாதிரி. அந்த அறியாமையினால் தான் நீர் சந்தோஷமாக இருக்கிறீர். உமது கற்பனைக்கு ஏற்றாற்போல் நிகழ்ச்சிகளையும் மாற்றிக்கொள்ளுவீர். இராமநாதபுரத்து மறவர்களைப் பற்றி உமக்கு என்ன ஐயா தெரியும்? அவர்கள் தளவாயைப்பற்றியும் எளிதாக நினைத்து விட்டீரா? ஒவ்வொருத்தனும் பிறவி வீரன் ஐயா பிறவி வீரன்! அதிலும் அதுவோ அவர்கள் தாய்நாடு. சும்மா விடுவார்களா? மேலும் இப்போது சேதுபதியிடம் இருக்கும் தளவாய் பெரிய தந்திரசாலி வேறு. நிச்சயம் ஒரு பிராமணப் பையனிடம் தோற்றுப் போகக்கூடியவர் அல்ல.

பிராமணர்கள் எதற்காகப் புரோகிதத் தொழிலை விட்டு விட்டு சண்டைக்கு வரவேண்டுமோ தெரியவில்லை, பண்டிதராவை எனக்கு ஐம்பது வருஷமாகத் தெரியும். பள்ளியில்கூட ஒன்றாகவே படித்தோம். ஏழையாகத்தான் இருந்தார். இந்த ராகவனோடே பழகுவதைக்கட குறைவாக நினைக்கமாட்டார். பிறகு பள்ளியை விட்டுவிட்டு மேலே படிக்கப்போனார். இப்போ பெரிய அறிவாளி என்று பெயர் வாங்கியிருக்கிறார். அவர் என் கூடப் படித்தார் என்பதே எனக்குப் பெருமைதான், நமது பழைய மகாராஜா துகோஜிக்கு இவர் தான் குருவாக இருந்தார். இன்றைய மகா ராஜா துகோஜி மகாராஜாவின் வாரிசு தானே. சொந்த மகன் இல்லையே என்றாலும் பண்டிதராவின் முயற்சியால் தான் மகா ராஜா ஆனார். அதனால் பிரதான்ஜியைக் காட்டிலும் பண்டித ராவின் ஆலோசனையைத் தான் மகாராஜா அதிகம் கேட்கிறார் என்பதில் என்ன ஆச்சரியம்? எனக்குக்கூட மகிழ்ச்சிதான். அதுமட்டுமில்லை, என்னைப்போல் அவருக்கும் பரங்கிக்காரனென்றால் பிடிக்காது. ஆகிலும் அதிகாரம் இருக்கிறது என்பதினால் இவர் இப்படித் தன் ஒரே மகனை இந்தப் படையெடுப்புக்குத் தலைவனாக்கி இருக்கவும் வேண்டாம்; போர்க்களத்துக்கு அனுப்பியிருக்கவும் வேண்டாம். பையனுக்கும் இரத்தத்தைக் கண்டாலே வலிப்பு வந்துவிடும் போலிருக்கு. யானை தன் தலையில் தானே மண்ணை வாரிப் போட்டுக் கொள்கிற கதை தான் பாருங்கள் நாட்டுக்கு இதிலே என்ன நன்மை? இந்தக் காரியத்தில் பிரதான்ஜிக்கும் சேனாதிபதிக்கும் சம்மதமில்லையாம். முதலில் அரசரும் அனுமதி கொடுக்கவில்லையாம். ஆனால் பண்டிதராவ் விடாப்பிடியாக இருந்து, அரசவையை விட்டுவிட்டு சந்நியாசியாகப் போய்விடுவதாகப் பயமுறுத்தினாராம். அவர் மனைவி இறந்ததிலிருந்தே இப்படிப் பயமுறுத்திக்கொண்டுதான் இருக்கிறார். கடைசியில் மகாராஜா இணங்க வேண்டியதாகிவிட்டது. வேறு என்ன செய்யமுடியும்?'

'எதனாலே அவருக்கு இப்படி ஓர் ஆசை? பிள்ளை பக்கத்தி லேயே இருக்கவேண்டுமென்று தோன்றும் இந்த வயது காலத்திலே வேறு எதற்காகத்தான் தன் ஒரே மகனைப் போருக்கு அனுப்பினார்? மேலதிகாரியைத் திருப்த்திபடுத்துவதற்காகக் கேட்டு வைத்தார் நாயக்,

பண்டிதராவுக்கு வேதங்கள் மட்டுமல்ல, சோதிடமும் கூடத் தெரியும். அவருடைய மகன் ஜாதகப்படி இருபத்து மூன்றாவது வயதிலே, அதாவது இந்த ஆண்டிலே பெரிய இராணுவ வெற்றிபெறுவான் என்றிருக்கிறதாம். அதனால் தான் புகழ்மிக்க தளவாயைக்கூடத் தோற்கடித்து விடுவான் என்று நினைக்கிறார். எப்படி? "உங்களுக்குச் சோதிடத்திலே நம்பிக்கை இல்லையோ?. என்று நாயக் கேட்டார் உதட்டிலே ஒரு மென்னகை நெளிந்தது.

வாளின் கைப்பிடியை அசைத்துக் காட்டி என் தம்பிக்கை யெல்லாம் இதில்தான், என்மூர் ஹனில் தார். அதுமட்டுமா, இதிலும் கூடத்தான். பிரம்மன் எழுதியதை யார் அழித்து எழுத முடியும்?' என்று தலையையும் தடவிக்கொண்டார்.

தலையெழுத்தை எழுதவோ மாற்றவோ முடியும் என்று சோதிடர்களும் சொல்லவில்லையே. அதை முன்கூட்டியே சொல்லமுடியும் என்றுதானே சொல்லுகிறார்கள். இருபத்து மூன்றவது வயதில் வெற்றிபெறுவான் என்று விதி இருந்தால் அவர் ஏன் தளவாயைத் தோற்கடிக்க முடியாது?

'சோதிடத்தை எப்படி நம்புவது? இரு பொருள் கொடுத்து இரண்டகம் பண்ணுகிற சாஸ்திரமாச்சே அது. நமக்கு வெற்றி வரட்டும். வேண்டாமென்று சொல்லவில்லை. ஆனால் ஒரு பிராமணப் பையனிடம் தோற்றுப் போகும்படியாக அந்தத் தளவாய் நரி தலையிலே எழுதியிருக்குமா என்பது தான் எனக்குச் சந்தேகம். முராரிராவ் புறப்படுகிறபோது சகுனம் சரியில்லை என்றுவேறு கேள்வி. அவர் மனைவிக்கு சீக்கிரமே குழந்தைப்பேறு இருக்கும் போலும், அவள் வேறு கண்ணீர் வடித்தாளாம். பெண்கள் அழுதால் சரி சரி, அதெல்லாம் எதற்கு. அதோ வீரர்கள் கிட்ட வந்துவிட்டார்கள். அட! வெங்கோபா அல்லவா? அவனுடைய கரும்பேய்க் குதிரையில் பாய்த்து வருகிறான். ஐந்துபேர் - இல்லை, இல்லை நான்கு பேர் வருகிறார்கள். நிச்சயமாய் அறந்தாங்கிச் செய்திதான் வருகிறது.

வாரும், நாம் கீழேபோய் விசாரிக்கலாம் பண்டித ராவ் மகன் என்ன செய்தார் என்று தெரிந்துகொள்ளலாம். இருவரும் கீழே இறங்கிக் கோட்டை வாசலைக் கடந்து வெளியே வந்தார்கள். குதிரை வீரர்கள் நெருங்கி வந்துவிட்டார்கள். நல்ல திடகாத்திரமான மராத்திக் குதிரைகள் தான். ஆனால் சோர்வடைந்திருந்தன. சட்டென்று பார்க்கும் போது சேணப் பொருள்கள் தான் சற்றுப் புதுமையாகத் தோன்றின. தோல், இரும்பு இவைகளுக்குப் பதிலாக வண்ணத் துணி, நூல், கயிறு, பித்தளை தான் அதிகமாகத் தெரிந்தன. வீரர்கள் ஏறத்தாழ ஹவில் தாரைப்போலவே உடை அணிந்திருந்தார்கள். இடையிலே வாள், தோளிலே நீண்ட வில். அம்பறாத் தூணியில் எருமைத்தோல் மூடிய கவசத்தில் கூரிய அம்புகள் கண்ணைப் பறித்தன. கள்ளர் குல வழிகாட்டி ஒருவன் வேல் ஏந்தி முன்னால் வந்தான். அவனுடைய தலையில் செந்நிறக் குதிரை மயிரும் சிறிய மணியும் இணைந்திருந்த குடுமி காண்போர் கவனத்தைக் கவர்ந்தது. வேறு இரு வீரர்கள், கூரிய ஈட்டிகள் தாங்கி வந்தனர்.

நடுவில் ஓர் அழகிய கருங்குதிரை துடிப்புடன் தாவி வந்தது. அதன்மீது கம்பீரமாக வீற்றிருந்த அந்த வீரன் கையில் மட்டுமே துப்பாக்கி இருந்தது. அவன் தான் தலைவன் போலிருக்கிறது.

வீரர்கள் நெருங்கி வந்துவிட்டார்கள். ஹவில்தார் முன்னால் வந்து, 'என்ன வெங்கோபா, ஏன் இவ்வளவு அவசரம்? சுப செய்திதானே' என்று கேட்டார்.

கடிவாளத்தை இழுத்துக்கொண்டே, ஹவில் தார்ஜியா?' என்றான் தலைவன்.

ஹவில் தார்ஜி, மகிழ்ச்சியான செய்திதான். நமது படைத் தலைவர் வீரத்தை எப்படிச் சொல்ல முடியும்? ஆனால் எங்களுக்கு ஒரு கண்டிப்பான உத்தரவு. செய்தியை முதலில் அவர் தந்தைக்கும், மகாராஜாவுக்கும் தான் சொல்லவேண்டுமாம். சேனாதிபதிக்கும் கூட அப்புறம்தான். அதனால் தயவுசெய்து மன்னித்துவிடுங்கள்,' என்று கூறிக் கொண்டே வெங்கோபா கடிவாளத்தைச் சுண்டினான். மீண்டும் குதிரைகள் கோட்டையை நோக்கிப் பறந்தன. ஹவில்தாருக்கு அதற்கு மேல் எதுவும் பேச இயலவில்லை.

நான் சொல்லவில்லையா, ஹவில் தார்ஜி, ' என்று எக்களிப்புடன் சொன்னார் நாயக்.

கிழவரின் எரிச்சல் இன்னும் அதிகமாகியது. அவசரப் படாதே' என்றார் கோபமாக. 'ஈட்டி எறியவும், அம்பு எய்வதற்கும் இந்தப் பயலுக்குக் கற்றுக் கொடுத்ததே நான் தான். சுத்த மரியாதை கெட்ட சின்னப் பயல், எங்கள் கொல்லைத் தோட்டத்தில் மாதுளம் பழம் திருடிவிட்டுப் பிரம்புப் பூசை வாங்கியது எல்லாம் மறந்துவிட்டது போலிருக்கிறது அவன் தாத்தா வயது எனக்கு. என்கிட்டே இப்படிப் பேசிவிட்டுப் போகிறானே! கலிமுத்திப் போச்சுடாப்பா. உலகமே முடியப்போகிறது' என்றார் ஹவில்தார்.

எல்லாம் இராணுவக் கட்டுப்பாடுதான். அது தான் அப்படி நடந்து கொள்கிறான்,' என்று கூறி அவரைச் சமாதானப்படுத்த முயன்றார் ஷெர்கான்.

என்ன செய்தியோ என்று அறியும் ஆவலில் அரண்மனையை நோக்கி விரைந்தனர் இருவரும்.

**தொடரும் ...**

**தமிழ்நாட்டின் தனிப்பெரும் நாவலாசிரியர் அ மாதவையா**

---

அருள்திரு. இரா. சாமுவேல் ஜெயசீலன்

கீதா நகர்

# விசுவாசி உபதேசியார்

திருநெல்வேலி திருமண்டலத்தின் முதல் சீர்திருத்த ஆலயம் குளோரிந்தா அம்மையாரால் 1783ம் ஆண்டு கட்டப்பட்டுக் கொண்டிருந்தது. ஆலய கட்டுமான வேலை நடந்து கொண்டிருக்கும் போதே அதில் ஊழியம் செய்யப் போதகர் ஒருவரைக் கேட்டுப் பெற வேண்டுமென்று தீர்மானித்த குளோரிந்தா, தன் நம்பிக்கைக்குப் பாத்திரமாயிருந்த பிச்சமுத்துப் பண்டிதரையும், கவிராயப்பரையும் தஞ்சாவூருக்கு சுவார்ட்ஸ் ஐயரிடத்தில் அனுப்பித், தன் வேண்டுதலைத் தெரிவிக்கத் திட்டம் பண்ணினாள். அவர்களிருவரும், உடனே நீண்டதும் ஆபத்துகள் நிறைந்ததுமான அப்பிரயாணத்தை தொடங்கினர்.

ஆபத்துகளும் பல பயங்கரங்களுமுள்ள கயத்தாறு - கோவில்பட்டி கானகத்தைக் கடந்து, மதுரையை அடைந்து, பின் அங்கிருந்து பயணமாகிப் புதுக்கோட்டையென்னும் தொண்டைமான் நாட்டின் பெரிய காடுகளையும் தாண்டி, அவர்கள் தஞ்சாவூர் சேர்ந்தனர். ஆறுகளையும் காடுகளையும் கடந்து செல்வதில் ஏற்படக்கூடிய ஆபத்துகளும், விபத்துக்களும் தவிர, அக்காலத்தில் ஹைதர் அலிக்கும் பிரிட்டிஷ் கம்பெனியாருக்கும் நடந்துகொண்டிருந்த போரினால் ஏற்பட்ட தொல்லைகளும் கஷ்டங்களும் அதிகம். அவை எல்லாவற்றிலும் அவர்களுடனிருந்து வழிநடத்தினது ஆண்டவரின் கிருபையேயன்றி வேறல்ல.

அவர்கள் தஞ்சாவூரையடைந்த சமயம் சங்கை சுவார்ட்ஸ் வெளியூர் போயிருந்தார். ஆகையால் அவர்கள் அவரைக் காணக்கூடாமல், அங்கிருந்த இந்திய குருவான ராயப்பன் ஐயரை சந்தித்தார்கள். அவர் அவர்களை அன்பாக ஏற்றுக்கொண்டு, வந்த காரியம் வினவினார். அவர்கள் தங்கள் வரலாறு கூறி, வந்த நோக்கத்தை விவரித்தனர். ஐயர் திருநெல்வேலிக்கு ஒரு குருவையாவது உபதேசியாரையாவது அனுப்புவது தன்னாலாகாத காரியமாதலால், அவர்களைத் தரங்கம்பாடிக்கு அனுப்பினார்.

தரங்கம்பாடிக்குச் சென்ற அவ்விருவரும் அங்கிருந்த மிஷனெரிமார்களை சந்தித்தனர். மிஷனெரிகள் தங்களைத் தேடிவந்த இருவரையும் ஏற்று உபசரித்து வந்ததின் நோக்கத்தை அறிந்து மகிழ்ந்தனர். சுத்த சுவிசேஷத்தை போதிக்கத்தக்க ஒரு மிஷனெரியையாவது ஒரு போதகரையாவது அல்லது ஒரு உபதேசியாரையாவது தங்களுடன் திருநெல்வேலிக்கு அனுப்ப

வேண்டுமென்று மன்றாடிக் கேட்டனர். மிஷனெரிமாரும் ஏற்ற ஒழுங்கு செய்வதாக வாக்களித்து அவர்களை அனுப்பி வைத்தனர். இதற்கிடையில் குளோரிந்தா அம்மையாரே சுவார்ட்ஸ் ஐயரை சந்திக்க தன் வளர்ப்பு மகன் ஹென்றியைக் கூட்டிக் கொண்டு பல்லக்கில் உதவியாட்கள் சகிதம் தஞ்சைக்கு புறப்பட்டு வந்தார். பிச்சமுத்துவும், கவிராயப்பரும் தஞ்சையில் குளோரிந்தாவை சந்திக்கவில்லை. குளோரிந்தா அம்மையார் தஞ்சாவூர் வந்ததை அறியாமலேயே அவர்கள் திருநெல்வேலிக்குத் திரும்பிவிட்டனர். தரங்கை மிஷனெரிமார் ராமநாதபுரத்தில் இருந்த தங்கள் உபதேசியார் விசுவாசி என்பவருக்கு செய்தி அனுப்பி அவர் உடனே பாளையங்கோட்டைக்குப் போய் அங்கே உள்ள நிலைமையை நேரில் அறிந்து தங்களுக்கு தெரிவிக்க வேண்டுமென்று கட்டளையிட்டனர். குளோரிந்தா அம்மையார் சுவார்ட்ஸ் ஐயரை தஞ்சாவூரில் சந்தித்தார்.

சுமார் ஒரு மாத காலம் குளோரிந்தா அங்கு தங்கியிருந்து, பின் 1784ம் ஆண்டு ஜனவரி இறுதியில் ஹென்றியை சுவார்ட்ஸ் ஐயரிடம் விட்டுவிட்டு தஞ்சையில் தான் கேள்விப்பட்டபடி விசுவாசி உபதேசியார் புறப்பட்டு விட்டாரா என்று பார்த்து, அவர் புறப்படா விட்டால் அவரையும் கூட்டிக்கொண்டு திருநெல்வேலி போய் சேர வேண்டும் என்று திட்டமிட்டு ராமநாதபுரத்துக்குச் சென்றார். அங்கு அவள் விசுவாசி உபதேசியாரைக் கண்டு, அவரை துரிதப்படுத்தி ஜனவரி 30ல் அவருடன் பாளையங்கோட்டையை நோக்கிப் புறப்பட்டாள்.

வழியில் பிச்சமுத்துவின் ஊரான ஒத்தாரம்பட்டியை நெருங்கினதும் விசுவாசி அவரைப்பார்த்துவர விரும்பி அங்கு செல்லவே, குளோரிந்தா அம்மையார் மட்டுமே பாளையங்கோட்டைக்கு வந்து சேர்ந்தார். குளோரிந்தா கட்டியிருந்த தற்காலிக சிற்றாலயத்தில் ஆராதனை நடத்த ஆளில்லை. விசுவாசி உபதேசியாரைப் பற்றி குளோரிந்தா அம்மையாருக்கு திருப்தி இல்லை. விசுவாசி உபதேசியாரும் பொறுப்புடைய மனிதராய் நடந்து கொள்ளவில்லை. வழியில் ஒத்தாரம் பட்டிக்குச் சென்றவர் அங்கு இரண்டு நாட்கள் தங்கி விட்டார். பிச்சமுத்துவின் உறவினரான ரோமானித்தவர்கள் பலரும் அவருடைய உடன் பிறந்தவராகிய சவரிமுத்தும், தென்திருவாங்கூர் என்று அழைக்கப்பட்ட நாஞ்சில் நாட்டில் இருந்தனர்.

அவர்களனைவருமே பிச்சமுத்துவின் மூலம் சுவிசேஷ மார்க்கத்தையறிந்து, கத்தோலிக்க போதனையின் மீது வெறுப்புற்றிருந்தனர். பிச்சமுத்து, விசுவாசி அங்குபோய் அவர்களிடம் பேசவேண்டும் என்று விருப்பம் தெரிவிக்கவே, இருவரும் தாமரைக்குளம் என்ற இடத்தில் சவரிமுத்தைக் கண்டு, நாஞ்சில் நாட்டில் சுமார் ஒரு மாதம் தங்கிவிட்டனர். பாளையங்கோட்டைச் சபையைச் சந்தித்து அங்குள்ள நிலைமையை நேரில் அறிந்து திரும்பக் கட்டளைபெற்று வந்த விசுவாசி, அக்கடமையை அறவே மறந்தவராக நாஞ்சில் நாட்டில் நாட்கழித்தது கிளாரிந்தாவுக்குச் சம்மதமாக யிருக்கவில்லை .

பாளையங்கோட்டைச் சபையில் புதிதாகச் சிலர் சேர்ந்திருந்தனர். அவர்களில் பலர் கத்தோலிக்க சபையிலிருந்தும், சிலர் இந்து மதத்திலிருந்தும் வந்தவர்கள். முன்னவர்களில் மரிய சவரிமுத்து என்ற பெயருடையவர் ஒருவரிருந்தார். கல்வி அறிவுடையவர். உறுதியான விசுவாசி. சுவிசேஷச் சத்தியத்தை அறிந்தவர். கிளாரிந்தா அவரை அழைத்து தான் ஏற்கனவே கட்டியிருந்த சிறிய தேவாலயத்தில் ஆராதனை நடத்திப் போதனை தருவதற்கு, விசுவாசிக்குப் பதிலாக, மரியசவரிமுத்துவை உபதேசியராக நியமித்தாள்.

மார்ச் மாதம் 5-ம் தேதி பாளையங்கோட்டைக்கு நாஞ்சிலிருந்து வந்து சேர்ந்த விசுவாசி உபதேசியாருக்கு இது வருத்தமோ, என்னவோ. அவர் சுமார் பதினான்கு நாட்கள் மட்டும் தங்கியிருந்தார். இக்காலக்கட்டத்தில், தேவசகாயம்பிள்ளையின் வீட்டில் ஒரு துயரம் அவரது மனைவி ஞானப்பூ அம்மாள் இறந்து விட்டார். குழந்தைகள் இளம் பிராயத்தினர். ஆகையால் துக்கம் ஒருவாறு நீங்கினதும் அவர் தன் மக்களை அழைத்துக் கொண்டு, ராமநாதபுரம் மாவட்டத்திலுள்ள ஆணைக் குளத்துக்குப் போய், அங்கு தன் மாமனார் சவரிராயனிடம் அவர்களை விட்டு விட்டுத் திரும்பினார். குழந்தைகள் தங்கள் தாத்தா பாட்டி வீட்டில் வளர்ந்து வந்தார்கள். அப்பெரியவர்கள் ரோமச் சபையைச் சேர்ந்தவர்கள். மாமனார் வீட்டில் சில நாட்கள் தங்கியிருந்த நாட்களில் தேவசகாயம் பிள்ளைக்குத் திரும்பவும் கத்தோலிக்க போதனையின் மீது பற்றுண்டாயிற்று போலும் அவர் பாளையங்கோட்டைக்குத் திரும்பி வந்த பின், அடிக்கடி கிளாரிந்தாவிடம் விவாதித்து வந்தார். கிளாரிந்தாவும் கத்தோலிக்கப் போதனைக்கெதிராகத் தனக்குத் தெரிந்த நியாயங்களையெல்லாம் எடுத்துக்கூறி வந்தாள். ஆயினும் அதிக பலன் ஏற்பட்டதாகத் தெரியவில்லை. அந்நாட்களில் பாளையங்கோட்டையில் இரண்டு வாரங்களைச் செலவிட்ட விசுவாசி உபதேசியாரும் தேவசகாயம் பிள்ளையுடன் உரையாடி அவருடைய மனதுக்குத் திருப்தியான உபதேசம் செய்வதில் கிளாரிந்தாவுக்கு எவ்வித உதவியும் செய்யவில்லை.

அவர் இரண்டு வாரங்கள் பாளையங்கோட்டையிலிருந்து விட்டு, மறுபடியும் ஒத்தாரம்பட்டிக்குப் போய்ச் சில நாட்களுக்குப் பின் ராமநாதபுரம் சேர்ந்தார். பாளையங்கோட்டையில் அவர் எந்த விதமான பணியும் செய்ததாகத் தெரியவில்லை .

---



**வரலாற்றிலேயே முதன் முறையாக குருத்து ஓலையில் ஸ்டோல் அணிந்த முதல் குருவானவர்**

**அருள்திரு H. ஜான் சாமுவேல்.**

உடன்குடி அருகில் உள்ள பண்டாரன் செட்டி விளை சி.எஸ்.ஐ. ஆலயத்தில் பாதிரியாராக பணி ஆற்றி வருகிறார். பாதிரியார்கள் கழுத்தில் அணியும் இந்த நீள பட்டைக்கு பெயர் ஸ்டோல். இதை பட்டுத்துணி, வெல்வெட் துணி, மெல்லிய வெள்ளை துணியில் செய்து அணிவார்கள். அதை பனை ஓலையில் செய்து அணிந்து கொண்டு, அனைத்து மக்களிடமும் இயற்கையை பாதுகாக்க வேண்டும் என்று விழிப்புணர்வு செய்து வருகிறார்

# மரியான் உபதேசியார்

## இயேசுவுக்காய் வாழ்ந்து மரித்த தொழுநோயாளர்

சந்திரா மனோகர், ஈரோடு
ஆசிரியர்,'அருளமுது' இதழ்

**'தோத்திரம் புகழ் கீர்த்தனம் ஜெய சோபனம் உமக்கையா'**
**'சுந்தரப் பரம தேவ மைந்தன் ஏசுகிறிஸ்துவுக்கு'**
**'நம்பினேன் உன தடிமை நான் அய்யா'**
**'புத்தியாய் நடந்து வாருங்கள்'**
**'கர்த்தரின் பந்தியில் வா'**
**'ஆறுதல் அடைஜமனமே'**

- இவை போன்ற புகழ்பெற்ற கிறிஸ்தவக் கீர்த்தனைகளை எழுதியவர் தான் மரியான் உபதேசியார் (1908-2008). அவர் நூறாண்டு காலம் வாழ்ந்தவர் அல்லர். ஆனால், அவர் மறுமையை அடைந்து நூறாண்டுகள் முடிவடைந்ததை நினைவுகூறும் வகையில், அருள்பணி. டி. பெனடிக்ட் தியாகராஜன் என்பவர் ஆங்கிலத்தில் எழுதிய CHRISTIAN JALI (part I) என்கிற நூலை 150வது வெளியீட்டு ஆண்டில் (150th year of publication) சென்னை - சி.எல்.எஸ் நிறுவனம் கடந்த 2008ம் ஆண்டில் வெளியிடப்பட்டுள்ளது.



மரியான் உபதேசியாரைப் பற்றிய முழுமையான விபரங்கள் எதுவும் கிடைக்கப்பெறாத நிலையில், உறுதிபடுத்தப்படாத சில தகவல்களை அந்நூல் பேசுகிறது.

மரியான் உபதேசியார் வாழ்நாள் முழுவதும் தொழுநோயால் பாதிக்கப்பட்டிருந்தார் என்பதும், அவரைப் பற்றிய முழு விபரங்கள் யாவும் இன்னும் வெளிச்சத்துக்கு வராத நிலையில் இருக்கிறது என்றும் நூலாசிரியர் மேலும் எழுதுகிறார்.

இந்திய வரலாற்றின்படி 16ம் நூற்றாண்டிலிருந்து 19ம் நூற்றாண்டுக்கு இடைப்பட்ட காலத்தில் தொழுநோயாளிகளுக்கு எந்தவிதமான கரிசனையோ பரிவோ செய்யாமல், அவர்கள் உயிருடன் எரிக்கப்பட்டார்கள் என்பது வரலாறு. கிறிஸ்தவ வரலாற்றின்படி மரியான் உபதேசியாரைப் பற்றி எவ்விதமான விபரங்களும் வெளிஉலகத்துக்குக் கிடைக்கப்பெறவில்லை. அவர் இயற்றிய அற்புதமான கீர்த்தனைகளை ஆதாரமாக கொண்டு, 17வது நூற்றாண்டில் வாழ்ந்த கிறிஸ்தவ கவிஞர்களை பற்றிய ஆய்வில், மரியான் உபதேசியாரைப் பற்றிய எந்த ஆதாரங்களும் கிடைக்கப்பெறாதது துயரமானது.

அதன் பின்னர் மேற்கொண்ட தீவிர முயற்சியில் அவரைப் பற்றிய விபரங்கள் ஓரளவு கிடைக்கப்பெற்றன. மரியான் உபதேசியார் திருநெல்வேலி மாவட்டத்திலுள்ள ஸ்ரீவைகுண்டம் கிராமத்தில் (இன்று திருவைகுண்டம் என்றழைக்கப்படுகிறது) பிறந்தார். அவர் கிறிஸ்டியான்பேட்டை, ஏழாயிரம் பண்ணை மற்றும் கோயில்பட்டி அருகேயுள்ள குளக்கட்டாகுறிச்சி ஆகிய ஊர்களில் பணிபுரிந்தார் என்றும் அவர் ஒரு தொழுநோயாளி என்றும் அறிய முடிகிறது.

அவர் போதிய கல்வியறிவு இல்லாதவர். அவர் குளக்கட்டாகுறிச்சியில் ஒரு சிற்றாலயத்தை நிறுவினார். ஆனால், சில சமூகவிரோதிகள் அதற்கு தீ வைத்து எரித்து விட்டனர். ஆனால், ஒரு இந்து சமயத்தைச் சார்ந்த செல்வந்தர் அதே ஆலயத்தைக் கட்டி எழுப்புவதற்கு பொருளுதவி செய்தார். இந்த உண்மைகளை மையமாக வைத்து பின்னாளில் அவர் இரண்டு கீர்த்தனைப் பாடல்களை இயற்றியிருக்கிறார்.

குறிப்பிடத்தக்க நிகழ்வில், அவருடன் பணிபுரியும் ஞானப்பிரகாசம் என்பவருடன் சமரசம் ஏற்படாத நிலையில், கர்த்தரின் பந்தியில் சேருமாறு அவருக்கு அழைப்பு விடுத்ததாக, ஒரு புகழ்பெற்ற கீர்த்தனையை இயற்றினார்.

கிறிஸ்தவ கீர்த்தனைகளை இயற்றியவர்கள் வரிசையில் இவர் மூன்றாமிடம் வகிக்கிறார். முதலிரண்டு இடங்களில் வேதநாயகம் சாஸ்திரியாரும், அருள்திரு. ஜாண்பால்மரும் இருக்கின்றனர் என்று சொல்லப்படுகிறது. அவருடைய பிறந்தநாள் குறிப்புகள் கூட தேவாலய பதிவுகளிலிருந்து கிடைக்கப் பெறவில்லை. இவர் தாழ்த்தப்பட்ட வகுப்பைச் சேர்ந்தவர் என்பதால், அவர் உயர்சாதியினரால் ஒடுக்கப்பட்ட நிலையிலேயே வாழ்ந்ததாக கூறப்படுகிறது. அந்தக்காலத்தில் இந்தியாவெங்கும் தலித்துகளும், அரிஜன மக்களும் வெகுவாக ஒடுக்கப்பட்டனர் என்பது தானே கசப்பான வரலாறு. ஆனால் இருபதாம்



மரியான் உபதேசியார் வாழ்ந்த வீடு

நூற்றாண்டில் பொது வெளியில் அரசியல், இலக்கியம், சினிமா போன்ற கலைகளில் பிற்படுத்தப்பட்டோரும், சமுதாயத்தில் ஒதுக்கப்பட்டோரும் மேலெழும்பி ஜொலித்தனர் எனலாம். தலித்துகளின் பிரத்யேகயான பேச்சு வழக்கிலிருந்து, அவர்கள் உயர்சாதி வகுப்பினரிடமிருந்து வேறுபட்டவர்களாகவே வாழ்ந்தனர்.

மரியான் உபதேசியாரைப் பொறுத்தமட்டில், சமஸ்கிருத மொழியில் பெற்ற பாண்டித்தியத்தை அளவுகோலாக வைத்துப் பார்த்தால், அவர் நிச்சயமாக தாழ்த்தப்பட்ட வகுப்பினராக இருக்க முடியாது என்பது தெளிவாகிறது. மேலும், அவர் சமஸ்கிருத வார்த்தைகளை இயல்பாகபயன்படுத்தியது மட்டுமல்லாமல், தான் இயற்றிய கீர்த்தனைகளில் அரிய தமிழ் சொற்களையும் பயன்படுத்தியதையெல்லாம் கருத்தில் கொண்டு பார்க்கும் போது, அவர் பிராமண வகுப்பினராக இருந்து, பின்னர் மதமாறியிருக்கக்கூடும் என்றும் கருதப்படுகிறது.



அவர் தொழுநோயால் பீடிக்கப்பட்டிருந்ததால், பெருங்கவிஞராகத் திறன் படைத்தவராக இருந்தபோதிலும், அவர் தன்னை தனிமைப்படுத்தி கொண்டிருக்க வேண்டும். திருச்சபையிலும், சபைமக்கள் ஐக்கியத்தில் இருந்தும்கூட அவர் ஒதுங்கியே இருந்ததாக அறியமுடிகிறது.

இந்த நிலையில் வெளிநாட்டு மிஷனரிகள், நற்செய்தியை மக்கள் மத்தியில் பரப்புவதற்கு இவரை சீரிய முறையில் பயன்படுத்தியிருக்க வேண்டும். அப்படியிருந்தும், ஆலய வரலாற்றிலும், இதர வரலாற்று ஏடுகளிலும் மரியான் உபதேசியார் இடம் பெறாதது ஆழ்ந்த வருத்தத்துக்குரியது.

இந்திய கிறிஸ்தவ வரலாற்றில் தன் வாழ்நாள் முழுவதும் ஏற்பட்ட துர்பாக்கியமான நிலைமையிலும், இயேசுவுக்காய்த் தன்னை முற்றிலும் அர்பணித்து வாழ்ந்தவர்களில் இவரைப் போன்று வேறு எவருமிலர் என்பது தான் உண்மை.

நன்றி: CHRISTAN JAIL (Part I)
By Rev. D. Benedict Thyagarajan

# வரலாற்று செய்தி

வரலாற்று சங்கத்தின் முக்கிய பயணமாக கடந்த 2019 செப்டம்பர் மாதத்தில் தென் நெல்லை அப்போஸ்தலர் கனம் ஜாண் தாமஸ் ஐயர் அவர்களின் மூன்றாவது மகன் சாமுவேல் சேஸ் கல்லறையை கண்டு பிடித்தோம்.

ஐரோப்பிய மிஷனரிகளின் கல்லறைகளைத் தேடி தென்காசி அருகில் உள்ள மேலகரம் சி. எஸ். ஐ கல்லறை தோட்டத்தில் தேடினோம் அங்கே 1841 ஆம் ஆண்டு முதல் 1891 ஆம் ஆண்டு வரை கிறிஸ்துவுக்குள் மரித்த ஐரோப்பிய மிஷனரி மற்றும் மிஷனரி குடுப்பங்களின் பதினைந்து கல்லறைகளை கண்டுபிடித்தோம்.

அப்போதைய சேகர குரு அருள்திரு ஜெபரத்தினம் அவர்கள் மூலம் சில முயற்சிகளை மேற்கொண்டோம் அவருடைய பணி மாறுதலில் நிமித்தமாக பணி தடைபட்டு விட்டது. மீண்டும் அதே குருவானவர் மூலமாக மெஞ்ஞானபுரம் திருச்சபை மக்களுக்கு கடந்த இரண்டு நாட்களுக்கு முன்பு இந்த தகவலை தெரிவித்திருந்தார். சபையாரும் இதைக் கேள்விப்பட்டு உடனடியாக அந்த இடத்தை நாங்கள் பார்க்க வேண்டும் என்று உடனடியாக வந்தார்கள். நேற்றைய தினத்தில் அந்த இடத்தை பார்வையிட்டு தற்போதைய தென்காசி சேகர தலைவர் அருள்திரு A.B. ஜான் கென்னடி ஐயா அவர்கள் ஆலோசனையின் பேரில் உடனடியாக அந்த இடத்தை சரி செய்து மிஷனரிகள் பயன்படுத்தி வந்ததை போன்ற சிறிய சிற்றாலயத்தை கட்டி தருவோம் என்று சொன்னார்கள். மெய்ஞானபுரம் சபையார் திரு செல்வராஜ் மற்றும் பெங்களூரு 'கல்வாரி சேப்பல்' மேனேஜிங் டைரக்டர் திரு. குணசேகரன் அவர்கள், துணைவியார் திருமதி. விக்டோரியா அவர்கள் ஆகியோர் நண்பர்களோடு பார்வையிட்டனர்.

மெஞ்ஞானபுரம் திருச்சபை மக்களுக்கும் தென்காசி சேகர குரு அருள்திரு ஜான் கென்னடி ஐயா அவர்களுக்கும் உதவி செய்த அருள்திரு ஜெப ரத்தினம் ஐயா அவர்களுக்கும் உடன் தென்காசி சேகரதில் பணியாற்றும் உடன் ஊழியர்களுக்கும் வரலாற்று சங்கத்தின் சார்பாக நன்றியை தெரிவித்துக் கொள்கின்றோம்.







# The Late Mr. Samuel Perinbam Catechist

மன்னா செல்வகுமார்

காலம் சென்ற கனம். சாமுவேல் பேரின்பம் உபதேசியார் அவர்கள் வட திருநெல்வேலியில் மிகவும் வயோதிபமும் மதிப்புமுடைய தேவ ஊழியர்களில் ஒருவராகிய கனம் சாமுவேல் பேரின்பம் உபதேசியார் அவர்கள், 1925-ம் டிசம்பர் மாதம் 5-ம் தேதி சனிக்கிழமை காலை 10 மணிக்கு, பொட்டல்பட்டி சேகரம் பாறைப்பட்டி என்கிற கிராமத்தில், தமது, 80-வது வயதில் கர்த்தருக்குள் நித்திரையடைந்தார்கள். இவர்கள் சுமார் 50 வருஷமாய், ஏறக்குறைய 20 இடங்களில், மிகவும் நல்ல வேலை செய்தவர்கள். 10 வருஷங்களுக்கு முன் பென்ஷன் பெற்று, பாறைப்பட்டியில் தான் இனத்தார் மத்தியில் தங்கினார்கள். பென்ஷன் பெற்றும் அவ்விடத்திலுள்ள சபையில் ஊழியர் உள்ள காலத்திலும், ஊழியர் இல்லாத காலத்திலும், தங்களால் கூடியதை உற்சாகமாய் செய்து வந்தார்கள். வர வர, வயோதிபத்தினிமித்தம் பெலன் குன்றி, ஒரு மாதகாலமாய் மிகவும் சத்து குறைந்து, டிசம்பர் 5-ம் தேதி, சமாதானமாய், தங்கள் ஜீவியத்தை முடித்தார்கள். மறுநாள் ஞாயிற்றுக்கிழமை மாலை, பொட்டல்பட்டி கனம் சாமுவேல் ஐயரவர்களால், அடக்க ஆராதனை மிகவும் பயபக்தியாய் நடந்தேறியது. அடக்கத்துக்கு கிறிஸ்தவர்களும் இந்துக்களுமாகிய அநேகர் வந்திருந்தது, அவர்களைப் பற்றிய மதிப்புக்கும் அன்புக்கும் அறிகுறியாயிருந்தது.

இரையரசனேந்தலுக்குச் சமீபமாயுள்ள கீழப்பாறைப்பட்டி என்ற ஊரில் 1846-ம் வருஷம் ஏப்ரல் மாதம் 17-ம் தேதி இவர்கள் பிறந்தார்கள். வட திருநெல்வேலியில் துவக்கத்தில் கிறிஸ்து மார்க்கத்தை ஏற்றுக்கொண்டவர்களில் இவர்கள் குடும்பமும் ஒன்று, அவர்கள் 11 வயதாயிருக்கும் போது, விதவையான தன் தாயார், சகோதரி சகோதரரோடும், இனத்தாரில் வேறே சிலரோடும், கனம் மேடோஸ் ஐயரவர்களால் குணப்படுத்தப்பட்டு, ஞானஸ்நானம் பெற்றார்கள், அதன் பின் சுரண்டை, சாட்சியாபுரம், பாளயங்கோட்டை ஆகிய இடங்களிலும் கல்வி பயின்றார்கள். பாடசாலையிலுள்ள காலங்களில் பாடங்களை கவனமாய்ப் படித்து, பக்தியுள்ள வாலிபனாய் விளங்கி, பெரியவர்களிடத்தில் மிகவும் மரியாதையாய் நடந்துகொண்டார்கள்

படிப்பு முடிந்ததும் தேவ ஊழியத்தில் அமர்ந்து, கால் வருஷமாய் பொட்டல்பட்டி, சிவகிரி, சோளபுரம், பாண்டவர் மங்கலம் முதலிய பல இடங்களில் நல்ல ஊழியம் செய்து வந்தார்கள். சில இடங்களில் இரண்டு மூன்று தடவை வேலை செய்திருக்கிறார்கள். தேவபக்தியோடு, நல் விவேகமும் கம்பீரமான தோற்றமும் இருந்ததினால், பல முக்கிய சபைகளில் வைக்கப்பட்டிருந்தார்கள். ஐக்கிய குறைவுகள் ஏற்பட்டுள்ள இடங்களுக்கு அனுப்பப்பட்டு சபையைச் சீர்திருத்தினார்கள். எங்கும் யாவரும் அவர்களுடைய குணநடத்தையினிமித்தமும், வழக்கப் பழக்கங்களினிமித்தமும், அதிகமாய் மதித்து வந்தார்கள். துவக்கத்தில் அநேக வருஷங்களாய் உபாத்தியாயர் வேலை செய்தார்கள். ஒவ்வோரிடத்திலும் ஜாக்கிரதையாய்க் கற்றுக் கொடுத்ததினால், பள்ளிக்கூட்டங்கள் விருத்தியாகி, அநேக பிள்ளைகள் படித்து அறிவில் தேறினார்கள். இந்த வேலையில் சோர்பு உண்டானதில்லை. பாடசாலையைத் தங்கள் வீடாகப் பாவித்து, காலை முதல் மாலை வரையில் அங்கே இருப்பார்கள், தாம் உபதேசியாரான பிற்பாடும், அவ்விடங்களிலுள்ள உபாத்திமார்களுக்கு இது விஷயமாய் அதிக உதவி செய்தார்கள்,

தமது வேலையில் தளர்ச்சி அடைவதில்லை. அதிகாலையிலெழுந்து பக்கத்து கிராமங்களுக்குப் போய், கிறிஸ்தவர்களை விசாரித்து, கஷ்டப்படுகிறவர்களுக்கு உதவி செய்து, புறமதஸ்தரையும் கண்டு பேசி வருவார்கள். காலை மாலை ஆராதனைகள் ஒழுங்காய் நடத்தி, உள்ளூர் குடும்பங்களை சந்திப்பதோடு இராப்பள்ளிக்கூடத்திலேயும் கற்றுக் கொடுப்பார்கள். எப்போதும் சுறுசுறுப்பாகவே காணப்படுவார். கிராம உத்தியோகஸ்தர்களாலும் மற்றோராலும் கஷ்டப்படுகிற கிறிஸ்தவர்களுக்கு மிகவும் உதவியாயிருந்து வந்தார்கள். இந்த விஷயத்தில் அவர்களுடைய இயல்பான பாசமும், பேச்சுத் திறமையும் காரிய சமர்த்தும் இவர்களுக்கு அதி உதவியாக இருந்தது. அவர்கள் பக்தியில் சிறந்து விளங்கினார்கள். ஸ்திரமான விசுவாசம் உண்டு, ஒழுங்கான வேத வாசிப்பும், தியான சிந்தையும் ஜெப வாஞ்சையும் உடையவர்கள், வாசிப்பில் பிரீதி அதிகம். பல காரியங்களையும், உலக சம்பவங்ளையும் அறிய அதிக ஆசை கொள்வார்கள். நல்ல ஞாபக சக்தியிருந்ததினால், அநேகருடைய பிரசங்கங்கள் அவர்கள் மனதிலிருந்தன. அவைகளை அடிக்கடி எடுத்துக் கூறுவார்கள். மிக்க ஒழுக்கும், திட்டவட்டமும், சுத்தமும், சிக்கனமுமுள்ளவர்கள். பொருள்களை ஒழுங்காயும் பத்திரமாயும் வைத்திருப்பார்கள்.

70 வருஷத்து புஸ்தகங்களும் பத்திரமாய் வைக்கப்பட்டிருக்கும். முகத்தை சுத்தமாயும், வஸ்திரத்தை வெண்மையாயும் வைத்துக் கொள்வார்கள். சிறு பிராயத்திலிருந்தே செட்டுமைத்தனம் இருந்தமையால், வேலை பார்த்த சில வருஷங்களுக்குள் ரூ. 200 போல் சேர்த்து, ஏலத்தில் ஓர் நஞ்சை வாங்கினார்கள். அது 1923 ல் ரூ. 6,000 மதிப்புப் பெற்றது. பிள்ளைகளில்லாததால் தங்கள் சகோதரர் சகோதரி பிள்ளைகளைப் படிப்பித்து முன்னுக்குக் கொண்டு வந்தார்கள். தாம் கல்வி கற்பதற்கு மிஷன் உதவி செய்தது போல, தாங்களும் மற்றவர்களுக்கு உதவி செய்ய வேணுமென்ற விருப்பமிருந்தது. தமக்கு உதவி செய்த பெரியோர்களை, விசேஷமாக மிஷனரிமார்களைப் பற்றி, மிகவும் நன்றியறிதலோடு, பேசிக் கொள்வார்கள். பழைய காலத்து மிஷனரிமார் போதக 'மார்களைக் குறித்து அவர்கள் அன்போடு பேசுவதைக் கேட்பது மிகவும் இன்பமாயிருக்கும். வட திருநெல்வேலியில் கிறிஸ்து மார்க்கத்தின் ஆதி சரித்திரம் அவர்களுக்கு நன்றாய்த் தெரியும். ராக்லெண்ட், மேடோஸ், பென், யெவ்ரீ, பேரன்புருக், வேதநாயகம், கொர்நேலியு, பவுல் முதலிய மகான்களைப்பற்றி, மிகவும் விஸ்தாரமாய் எடுத்துக்கூறக்

கூடியவாகள். அவர்கள் அப்படிச் சொல்லும் போது' பூர்வகாலத்து மறை பொருள்களை வெளிப்படுத்துவேன், (சங்: 78: 2) என்ற சங்கிதக்காரனின் வாசகம், அநேகர் மனதில் வரும்.

கனம் சாமுவேல் உபதேசியார் அவர்கள், முதல் தரமாக, சொக்கலிங்கபுரத்தில் பரிபூரணம் என்கிற ஓர் அம்மாளை விவாகம் செய்தார்கள்; அவர்களுக்கு சந்ததியில்லை. 1892-ம் வருஷம் அவர்கள் மரித்துப் போக, பாறைப்பட்டியில், தமக்கு நெருங்கின இனமான, செபத்தியாயி என்ற அம்மாளை கல்யாணம் செய்து மூன்று குமாரரும் இரண்டு குமாரத்திகளும் உள்ள ஓர் குடும்பஸ்தரானார்கள். தேவன் இவர்களைப் பல விதத்திலும் ஆசீர்வதித்திருந்தார். சங்கீதக்காரனின் 80 வயது எல்லையையும் காணக் கிருபை செய்தார். பக்தி, ஒழுக்கம், சுறுசுறுப்பு, சுத்தம், சிக்கனம் முதலிய பல குணங்கள் இவர்களில் சிறந்து விளங்கின, இவர்கள் ஜீவியமும், ஊழியமும் குணசீலமும் இவர்களை அறிந்த எல்லாருக்கும் ஓர் ஆசீர்வாதமாயிருக்கும்படி தேவன் அருள்புரிவாராக,

## ஐயர்பாடியில் அரும்பணியாற்றிய கடைசி

# உபதேசியார் திரு. ஆர். பால்

அருள்திரு தே. இராஜதுரை
திருச்சி

சி.எஸ்.ஐ. திருச்சி தஞ்சை பேராயம் ஆனைமலை என்பது ஒரே சேகரமாக தாராபுரம் மறைமாவட்டத்துடன் இணைந்திருந்தது. ஒரு மெதடிஸ்ட் மிஷனெரி, ஒரு இந்திய ஆயர், சில உபதேசியார்கள் மட்டுமே பணியாற்றி வந்தனர். ஐயர்பாடி செக்சனில் அரும்பணியாற்றியவர் இறுதியாக வந்த திரு. பால் உபதேசியார் அவர்கள். குண்டடம் சேகரத்தில் உள்ள ஓடக்கல் பாளையத்தில் 15.8.1910ல் திரு ச ராஜரத்தினம் தம்பதியர்க்கு மகனாகப் பிறந்தார். அவருடன் பிறந்தவர்கள் திரு. சிகாமணி, திரு. பேதுரு, திரு. தானியேல் ஆகியோர் தேயிலைத் தோட்டப்பணியாளர்களாகப் பணியாற்றினார்கள். தாராபுரம் மிஷன் பள்ளியில் 8ம் வகுப்பு வரை படித்த திரு. பால், தாராபுரம் ஆசிரிய பயிற்சிப்பள்ளியில் இளநிலை ஆசிரியராகப் பணியாற்றினார். ஆண்டவருடைய அழைப்பைப்பெற்று, கிண்டியில் உள்ள உபதேசியார் பயிற்சி நிலையத்தில் 1944-46, இரண்டு ஆண்டுகள் வேதாகமப் பயிற்சி பெற்று உபதேசியாராகப் பணியில் சேர்ந்தார்.

பணியாற்றிய இடங்கள் கரூர் உப்பிடமங்கலம், அலங்கியம், பெரிச்சி பாளையம், அம்மாபட்டி, கெத்தல், ஐயர்பாடி, வால்பாறை, மடத்துக்குளம், பழைய கோட்டை ஆகிய இடங்களில் 1946 முதல் 1979 வரை 33 ஆண்டுகள் உபதேசியாராகப் பணியாற்றினார்கள். பணியாற்றிய இடங்களில் எல்லாம் மிகச்சிறப்பான பணி செய்தார்கள்.

குறிப்பாக 1960 முதல் 1972 வரை 12 ஆண்டுகள் ஆனைமலை பகுதியில் ஐயர்பாடி, வால்பாறை ஆகிய இடங்களில் தங்கிப் பணியாற்றினார்கள். மிக நிதானமாக, பொறுமையாக, கால்நடையாக நடந்தே பல இடங்களுக்குச் சென்று பணியாற்றி வருவார். பல நாட்களில் மாலையில் ஊழியத்துக்குச் சென்றால், இரவு 12 மணிக்குத்தான் வீடு வந்து சேர்வார். பல நேரங்களில் காட்டு மிருகங்களுக்குத் தப்பியும் வந்துள்ளார். ஆழ்ந்த இறையியல் உண்மைகளை மிகத்தெளிவாக எளிய மக்களும் புரியும்படி அருளுரையாற்றுவார். அரிக்கன் விளக்கை எடுத்துக்கொண்டு மழைகாலங்களிலும் வீடு சந்திப்பு செய்வார். மிகக்கடுமையான உழைப்பாளி. இரவு பகல் பாராமல் கால்நடையாகவே மலைப்பாதைகளில் சென்று ஊழியம் செய்வார். மிகவும் அன்பானவர். அமைதியானவர்.

திருமதி.ஞானரத்தினம் அவர்களை வாழ்க்கைத் துணைவியாக கரம்பிடித்தார். வேதாகமப் பெண் ஊழியராகத் தன் கணவருடன் சேர்ந்து பணியாற்றினார்கள். அவர்களுக்கு ஆண் பிள்ளைகள் 4 பேர், பெண் பிள்ளைகள் 2. திரு. லாரன்ஸ் வில்லியம் ஆசிரியராகப் பணியாற்றி ஓய்வு பெற்றுள்ளார். திருமதி பத்மாவதி - செவிலியராகப் பணியாற்றி ஓய்வு பெற்றுள்ளார்கள். திரு. வின்செண்ட் கோவை சி.எஸ்.ஐ மேல்நிலைப் பள்ளியில் ஆசிரியராகப் பணியாற்றி ஓய்வுபெற்றுள்ளார். திரு. கருணாகரன், வெல்டராக மடத்துக்குளம் பகுதியில் உள்ளார். திருமதி மேரி சரோஜா, திரு, ஸ்டீபன்ராஜ் கர்த்தருக்குள் நித்திரை அடைந்துள்ளனர். திரு. பால் உபதேசியார் அவர்கள் ஓய்வுபெற்ற பின் கோவையில் தன் பிள்ளைகளுடன் தங்கி இருந்தார். தனது 86 வயதில் 27.5.1996 ல் கர்த்தருக்குள் நித்திரை அடைந்தார். உயிர்த்தெழுதலின் நம்பிக்கையுடன் அந்நாளில் கோவை, இம்மானுவேல் ஆலயக் கல்லறைத் தோட்டத்தில் நல்லடக்கம் செய்யப்பட்டார்.

'கர்த்தருக்குள் மரிக்கிறவர்கள் இதுமுதல் பாக்கியவான்கள் என்றெழுது; அவர்கள் தங்கள் பிரயாசங்களை விட்டொழிந்து இளைப்பாறுவார்கள்; அவர்களுடைய கிரியைகள் அவர்களோடே கூடப்போம்; ஆவியானவரும் ஆம் என்று திருவுளம் பற்றுகிறார் என்று சொல்லிற்று.' வெளி.14:13

நெல்லை சரித்திர சாதனையாளன்

# சத்தியநாதன்

நிருபா ஜேசுவடியான்

30.7.1750 அன்று தரங்கம்பாடியில் கால்பதித்த சுவார்ட்ஸ் ஐயர், சுவிசேஷம் அறிவிக்க பல அணுகுமுறைகளைக் கையாண்டார். நற்செய்தி பணியுடன் கல்விப் பணியையும் செய்ய ஆரம்பித்த அவர், தரங்கம்பாடி, திருச்சி, தஞ்சாவூர், திருநெல்வேலி என தமிழகத்தின் பல மாவட்டங்களுக்கும் சென்று கிறிஸ்துவின் பணியை செய்தார். அதன் மூலம் பலர் கிறிஸ்துவை ஏற்றுக் கொள்ள ஆரம்பித்தனர். சுவார்ட்ஸ் ஐயரைப் போன்று அயல் நாட்டிலிருந்து தமிழ் நாட்டிற்கு பணி செய்ய வந்த ஊழியர்களால் ஒரு குறிப்பிட்ட வரையறைக்குள் மட்டுமே ஊழியம் செய்ய முடிந்தது. மக்கள் கலாச்சாரம், மொழி, பழக்கவழக்கம் ஆகியவற்றால் வேறுபட்ட ஊழியர்களை ஏற்றுக்கொள்ள தயங்கினர். ஆனால் கிறிஸ்துவை ஏற்றுக்கொண்ட தன் இன மனிதன், இயேசு கிறிஸ்துவைப் பற்றிக் கூறும்பொழுது, ஆர்வத்துடன் ஏற்றுக்கொண்டனர். அது மிகப்பெரிய விளைவுகளையும் உண்டாக்கியது. கிராமம் கிராமமாக மக்கள் கிறிஸ்துவின் மந்தையில் இணைந்தனர். ஆகவே சுவார்ட்ஸ் ஐயர் அவர்கள், ஊழியம் செய்ய வாஞ்சையுள்ள விசுவாசிகளை உற்சாகப்படுத்தி, அவர்களுக்குத் தேவையான ஊழிய பயிற்சிகளையும் அளித்து, அவர்களை உபதேசியார்களாக ஊழியம் செய்ய அனுப்பினார்.

**உபதேசியார் சத்தியநாதன்**:

உத்தமபாளையத்தில் அம்மையப்ப பிள்ளைக்கு ஒரே மகனாக 1753 ஆம் ஆண்டு கற்பகம் பிறந்தார். சிறுவயதிலேயே தன் தகப்பனாரை இழந்த கற்பகம், கிராமப் பள்ளியில் வாசிக்க, எழுத கற்றுக்கொண்டார். அவரது தாயார், தன் மகனுக்கு இளம் வயதிலேயே திருமணமும் செய்து வைத்தார். ஒருநாள் கற்பகம் உறையூருக்கு சென்றபோது சுவார்ட்ஸ் ஐயரை கண்டார். அதுவரை வெள்ளைக்காரரைப் பார்த்திராத அவர் பயந்து, அருகிலிருந்த தெரு வழியாக தப்பிச் செல்ல முயன்றார். சுவார்ட்ஸ் அவர் பின்னாலேயே சென்று அவரை நிறுத்தி அவரிடம் பேசினார். இருவரும் நண்பர்களானார்கள். கற்பகம், திருச்சியில் இருந்த சுவார்ட்ஸ் ஐயரிடம் சில நாட்கள் தங்கி, சுவிசேஷத்தை கேட்டு, இயேசுவை சொந்த இரட்சகராக ஏற்றுக் கொண்டார். 1772 ஆம் ஆண்டு கற்பகம், சுவார்ட்ஸ் ஐயரால் ஞானஸ்தானம் பெற்று, சத்தியநாதன் என்று பெயரிடப்பட்டார். ஞானஸ்நானத்திற்கு பின் சத்தியநாதன் சுவார்ட்ஸ் ஐயரின் சீஷரானார். இருவரும் அடிக்கடி சந்தித்தனர். தன்னிடம் வேதத்தைக் கற்று வந்த சத்தியநாதனுக்கு, சுவார்ட்ஸ் ஆத்தும ஆதாயம் செய்ய பயிற்சியும் அளித்தார். திருச்சியிலும் அதன் அருகில் உள்ள கிராமங்களுக்கும் சென்று சத்தியநாதன் சுவிசேஷத்தை அறிவித்து வந்தார்.

பாளையங்கோட்டையில் பணி செய்து வந்த குளோரிந்தா அம்மையார், பாளையங்கோட்டைத் திருச்சபைக்கு முழுநேர ஊழியர் வேண்டுமென சுவார்ட்ஸ் ஐயரை கேட்க தஞ்சாவூர் சென்றார். 1785 ஆம் ஆண்டு சத்தியநாதன், சுவார்ட்ஸ் ஐயரால் திருநெல்வேலிக்கு உபதேசியாராக அனுப்பப்பட்டார். 1790 ஆம் ஆண்டு டிசம்பர் 26ம் தேதி, லுத்தரன் திருச்சபை முறைப்படி சத்தியநாதனுக்கு குரு பட்டம் கொடுக்கப்பட்டது. பாளையங்கோட்டையில் ஊழியத்தை சத்தியநாதன் ஆரம்பித்த நாட்களில், ஒரு சில திருச்சபைகளும் ஒரேயொரு பள்ளிக்கூடமும் இயங்கி வந்தது. பாளையங்கோட்டை திருச்சபையின் முழுப்பொறுப்பையும் சத்தியநாதன் உபதேசியாரிடம் சுவார்ட்ஸ் ஒப்படைத்தார். குளோரிந்தா அம்மையாரும் அவரோடு பெருந்தன்மையாக ஒத்துழைத்தார். சத்தியநாதன் தமிழ் கிறிஸ்தவர்களையும், குளோரிந்தாவால் உருவாக்கப்பட்ட பள்ளியையும் தினந்தோறும் மேற்பார்வை செய்து வந்தார். சத்தியநாதன் பாளையங்கோட்டையில் பணி செய்த நாட்களில் கிறிஸ்தவம் அதிவேக வளர்ச்சியை கண்டதாக சரித்திரம் கூறுகிறது. பாளையங்கோட்டையின் சுற்றுப்புறங்களில் குறிப்பாக பத்மநாபபுரம், பூவாணி ஆகிய இடங்களில் சபைகள் பெருகின.

சத்தியநாதனின் 7 வயது மகள் அம்மை வியாதியினால் மரித்துப் போனாள். அந்தக் குழந்தையின் அடக்க ஆராதனையில் சுவார்ட்ஸ் கலந்து கொண்டார். தன் மகளுடைய அடக்க ஆராதனையில் பள்ளிப் பிள்ளைகளோடு இணைந்து சத்தியநாதன், Jesus My Hope என்ற பாடலை பாடினார். அதை கண்டு தன்னால் கண்ணீரை கட்டுப்படுத்த முடியவில்லை என்று சுவார்ட்ஸ் கூறுகிறார். மேலும் சுவார்ட்ஸ் சத்தியநாதனைப் பற்றி கூறும் போது, சத்தியநாதன் கிறிஸ்துவை மிகவும் அதிகமாய் நேசித்தவர். இந்தியர்களையும் நேசித்து ஊழியம் செய்தவர். அவர் மிகச்சிறந்த பிரசங்கியார். ஏழைகளை மிகவும் அதிகமாய் நேசித்தவர். அதுமட்டுமல்லாது அவர்களுக்கு உதவியும் செய்தவர். அவருக்கு சமமான இந்தியர் வேறு ஒருவரும் இல்லை என்கிறார்.

கிறிஸ்தவர்களின் எண்ணிக்கை அதிகரிக்க, அதிகரிக்க, ஊழியர்களின் தேவையும் அதிகரித்தது. ஆகவே சத்தியநாதன் தன்னுடன் பணி செய்ய இன்னொரு உபதேசியாரை அனுப்பும்படி சுவார்ட்ஸ் ஐயரை கேட்டுக்கொண்டார். 1796 ஆம் ஆண்டு தாவீது சுந்தரானந்தனை சுவார்ட்ஸ் உபதேசியாராக பாளையங்கோட்டைக்கு அனுப்பி வைத்தார். 1797 ஆம் ஆண்டு மார்ச் மாதம் சத்தியநாதன், தாவீது சுந்தரானந்தனின் உறவினர்கள்

வசித்த விஜயராமபுரம் கிராமத்தில் ஊழியம் செய்ய அவருடன் சென்றார். இருவரும் அங்கு சுமார் 16 நாட்கள் தங்கியிருந்து இரவு பகலாக அவர்களிடம் ஓய்வில்லாமல் சுவிசேஷத்தை உபதேசித்து வந்தனர். அந்த வட்டாரத்தில் அவர்களின் ஒருமித்த முயற்சி பெரியதோர் எழுச்சியாயிற்று. ஜாதி வேறுபாடின்றி ஊழியர்கள் மக்களை அணுகிய முறை அவர்களை அதிக ஆச்சரியத்திற்குள்ளாக்கியது. அவரின் உறவினர்களில் 20 பேர் உடனடியாக ஞானஸ்நானம் பெற்றனர். அவர்களைத் தொடர்ந்து ஆயிரக்கணக்கான மக்கள் கிறிஸ்துவின் மந்தையில் சேர்ந்தனர். அதே நேரத்தில் எதிர்ப்புகளுக்கும் ஏளனத்திற்கும் உள்ளாயினர். என்றாலும் கிறிஸ்துவின் மீது வைத்திருந்த நம்பிக்கையில் மக்கள் சற்றும் பின்மாற்றம் அடையவில்லை. சத்தியநாதனின் உடல் மிகவும் பலவீனப்பட்டது.

மேலும் அவர் பணி ஓய்வு பெற்றபின் 1805ம் ஆண்டு பாளையங்கோட்டையில் இருந்து தஞ்சாவூருக்கு சென்றார். அவர் சென்ற போது, பாளையங்கோட்டையில் 35 பெரிய திருச்சபைகளும், அதோடு 45 சிறிய சபைகளும், 30 உபதேசியார்களும், 12 பள்ளிகளும் அதில் பணியாற்றிய ஆசிரியர்களும் இருந்தனர், மேலும் 5000ற்கும் மேற்பட்ட ஞானஸ்நானம் பெற்ற திருச்சபை மக்களும் இருந்தனர். அநேக ஆலயங்கள் மற்றும் சிற்றாலயங்களையும் அவர் கட்டினார். 1815ஆம் ஆண்டு சத்தியநாதன் ஐயர் மரணமடைந்தார். ஆனால் அவரது உழைப்பால், தரிசனத்தால் பிறந்த திருச்சபைகள் இன்றும் அழியாது பாளையங்கோட்டையில் கம்பீரமாக கிறிஸ்துவின் புகழைப் பாடிக் கொண்டு வருகிறது.

இயேசுவை அறியாத குடும்பத்திலிருந்து வந்த சத்தியநாதன் உபதேசியார் இத்தனை வைராக்கியமாய் கிறிஸ்துவுக்கென்று இரவு பகல் பாராது நெடுதூர பிரயாணம் செய்து பெரிய சிறிய திருச்சபைகளை உருவாகியிருப்பார் என்றால் **இன்று தலைமுறை கிறிஸ்தவர்களாய் வாழும் நமது பொறுப்பு தான் என்ன? இன்றே தீர்மானம் செய்வோம்.**

## வரலாற்று செய்தி



தமிழ் கிறிஸ்தவ வரலாற்றில் வரலாறு படைத்துக் கொண்டு இருக்கும் மாத ஆய்விதழ் தான் கிறிஸ்தவ வரலாற்று சங்கத்தின் கிறிஸ்தவ வரலாற்றுச் சுவடுகள் மாத இதழ் நம்முடைய இதழை மதுரை இராமநாதபுரம் திருமண்டலத்தின் குருத்துவ செயலரும் மதுரை கதிட்ரல் பேராய தலைமை குருவானவருமான அருள்திரு. A . டேவிட் ஜெபராஜ் ஐயா அவர்களிடம் நம்முடைய சங்கத்தின் கிறிஸ்தவ வரலாற்றுச் சுவடுகள் மாத ஆய்விதழை கொடுத்து சந்தித்த பொழுது எடுத்தப் படம்..



நம்முடைய வரலாற்று சங்கத்தின் ஈரோடு பகுதி பொறுப்பாளர் திரு ரமேஷ் அவர்கள் திரு. பிரபு சி.எஸ்.ஐ சிலேட்டர் நகர் போதக சேகரத்தின் செயளாளர் அவர்கள் நம்முடைய சங்கத்தின் கிறிஸ்தவ வரலாற்றுச் சுவடுகள் மாத ஆய்விதழை கொடுத்து சந்தித்த பொழுது எடுத்தப் படம்..

# வச்சிரமணி கிறிஸ்தியான் வழிவந்த செந்தமிழ் புலவர்

## சங்கை பி. எஸ். பீற்றர்

பேராசிரியர் . ந . ஜான் ஜயானந்தம்,
சென்னை

கடந்த பதிவின் தொடர்ச்சி...

சங்கை பி. எஸ். பீற்றர் மாணவனாக கால்டுவெல் பள்ளி விடுதியில் தங்கி உயர்நிலை இரண்டாம் படிவம் (இன்றைய 7-ஆம் வகுப்பு) படித்துக் கொண்டிருந்த காலத்தில் நிகழ்ந்த சுவையான அனுபவம் ஒன்றுண்டு. அச்சமயம் விடுதியில் அளிக்கப்படும் உணவு தரம்குன்றி இருந்ததால் இளம் மாணவர்கள் அதிக சலிப்பு அடைந்திருந்தனர். ஆயினும் பள்ளி அதிகாரிகளிடத்தில் அதை எடுத்துரைக்கும் துணிவு அவர்களுக்கில்லை. ஒரு பௌர்ணமி இரவு., சில மாணவர்கள் விடுதியின் தோட்டப்பகுதியில் ஒன்று கூடி, தம் உடன் மாணவன் பீற்றரை நடுவே நிறுத்தி, விடுதியில் வழங்கப்படும் உணவைப்பற்றி ஒரு பாடல் பாடும்படி வேண்டினர். நம் மாணவர் பீற்றரும் வாலிப உற்சாகத்துடன் பாட ஆரம்பித்தார்.

கொச்சிக்காய் துவையல் போட்டான்,
நச்செலிப் பயல்கள் கூடி!
அத்தியக்ஷர் கால்டுவெல் பள்ளிக்கூடத்தில் - ஆகா
அத்தியக்ஷர் கால்டுவெல் பள்ளிக்கூடத்தில்!

எனப் பீற்றர் சத்தமாகப் பாட, மற்ற மாணவர்கள் எல்லாரும் 'ஆமாம், அத்தியட்சர் கால்டுவெல் பள்ளியிலே!' என்று கடைசி வரியை எடுத்துப்பாடினர்.

1. சொச்சிக் காய் துவையல் தனை
மிச்சம் மிச்சம் தின்று விட்டு,
அச்சச்சோ அண்டிக்கடுப்பில் மாயுறான் - ஆமாம்
அச்சச்சோ அண்டிக்கடுப்பில் மாயுறான் !
2. சொல்லப் போமனால் வெட்கக்கேடு
சோற்றைப் பார்த்தால் அதிலும் கேடு ,
சொல்லிக் கொள்ளாமல் வீட்டுக்கு ஓடுவாய் - நீயும்
சொல்லிக் கொள்ளாமல் வீட்டுக்கு ஓடுவாய்.
3. கேட்டுவிட்டால் மட்டை அடி
கேட்காவிட்டால் மண்டை இடி,
வீட்டுக்கும் போனால் விளக்குமாற்றடி - ஐயோ!
வீட்டுக்கும் போனால் விளக்குமாற்றடி!

இவ்வாறு பீற்றர் கவிகளைச் சொல்லிப் பாட, மற்ற மாணவர்கள் சேர்ந்து கடைசியடியை இராகத்துடன் எடுத்துப்பாடினர். மாணவர்களின் இந்த பஜனைக் கோஷ்டியைத் தலைமை ஆசிரியர் அருகில் இருந்த ஒரு மரத்தின் நிழலில் மறைந்து நின்று கவனித்துக் கொண்டிருந்தார். பாடல் முடிந்ததும், தலைமை ஆசிரியர் 'பீற்றர்' உரக்கக் கூப்பிட, மாணவர் அனைவரும் ஓடி மறைந்தனர். பீற்றர் தைரியமாகத் தலைமை ஆசிரியரிடம் சென்றார். விடுதி உணவு தரக்குறைவு பற்றி என்னிடம் ஏன் எடுத்துக் சொல்லவில்லை யெனக்கூறி, பீற்றரின் கவித்திறமையை அதிகமாக மெச்சிக் கொண்டார். அதன் பின்பு மாணவர் விடுதி உணவின் தரம் உயர்ந்ததாக கூறப்படுகிறது. இவ்வாறு பீற்றர் அவர்களின் கவித்திறமை இளமையிலேயே வெளிப்பட்டது.

**கல்வியும் ஆயத்தமும்**

பள்ளிப் படிப்பு முடித்த பின்பு அவர்கள் F.A. (Fellow of Arts) பட்டம் பெற்றார். சுமார் 18 ஆண்டுகளுக்குப் பின்னர் அவர் 1902 -இல் தான் இங்கிலாந்துத் திருச்சபையின் முறைமையின்படி குருப்பட்டம் பெற்றார். அப்பொழுது அவருக்கு 38 வயது. ஏற்கனவே திருமணம் ஆகியிருந்த அவர் இதற்கிடையில் வேறு ஒரு பணியில் அமர்ந்திருக்க வேண்டும். அக்காலத்தில் அரசாங்க அலுவல்களும் மிகக்குறைவு. நடுத்தரக் குடும்பத்தினர், குறிப்பாகக் கிறிஸ்தவக் குடும்பத்தினர் வியாபாரம் முதலிய தொழிலில் ஈடுபடுவதில்லை. அவர்கள் பொதுவாக ஆசிரியர் பணியையே நாடுவர். அவர் குருப்பட்டம் பெற்றபின்பு, நாசரேத்தில் 1902 முதல் 1910 வரை இறைபணியில் ஈடுபட்டிருந்த துவக்க காலத்திலேயே அங்கு மிஷனரிகளினால் ஆரம்பிக்கப்பட்டிருந்த பெண்கள் போதனாப் பயிற்சிப் பள்ளியின் தலைமை ஆசிரியர் பதவியையும் வகித்து வந்த காரணத்தினால், அவர் ஏற்கனவே ஆசிரியராகப் பணியாற்றிய அனுபவமும் முதிர்ச்சியும் பெற்றவராக இருந்திருக்க வேண்டும் என்றும், அவருடைய திறமையினிமித்தமே தலைமை ஆசிரியர் பதவியில் அவர் அமர்த்தப்பட்டிருக்க வேண்டும் எனவும் நாம் நிதானிக்கலாம். அவ்வாறு ஏற்கனவே ஆசிரியராகப் பணியாற்றி வந்த காலத்தில்தான் அவர் இறைபணிக்கான தேவ அழைப்பைப் பெற்று, குருப்பட்டம் பெறுவதற்கான பயிற்சியில் சேர்ந்திருக்க வேண்டும்.

**குடும்ப வாழ்க்கை**



பி. எஸ் பீற்றர் அவர்கள் 1888 ஜூலை மாதம் 4-ஆம் தேதி, வச்சிரமணி கிறிஸ்தியான் உபதேசியாரின் மகளும், சங்கை சி. பி. ஞானமணியின் இளைய சகோதரியுமான லிதியாள்

அமிர்தம்மாளைத் திருமணம் செய்தார். அவரது திருமணம் அளகப்புரம் என்ற நன்னிகுளம் ஆலயத்தில். ஞானாயுத ஐயரவர்களால் நடத்தி வைக்கப்பட்டது. அவருக்குப் பதினோரு பிள்ளைகள் பிறந்தார்கள். அவர்களில் ஆறு பேர் ஆண் மக்களாவர். இருவர் குழந்தைப் பருவத்திலேயே மரித்து விட்டனர். பீற்றர் ஐயர் அவர்கள் தம் பிள்ளைகளையும், உறவினரையும் தம்மோடு அணைத்துப் பராமரிக்கும் அன்புள்ளமுடையவராக இருந்தார். தினமும் அவர் வீட்டில் சுமார் 25 பேருக்கு மேல் உணவு தயாரிக்கப்படும். விடுமுறை நாட்களில் அவ்வெண்ணிக்கை கூடும். அவருடைய வீடு ஒரு விடுதி (ஹாஸ்டல்) என்று வேடிக்கையாக அழைக்கப்படுவதுண்டு. அவர்கள் அனைவரையும் ஒழுங்குமுறை தவறாது அன்புடன் கண்காணித்து வந்த பெருமை ஐயரவர்களின் துணைவியாரைச்சாரும்.

தினமும் அதிகாலை 5 மணிக்கும், மாலை 7.30 மணிக்கும் சிறுபிள்ளைகள் உட்பட அனைவரும் குடும்ப ஜெபத்திற்கு வந்து துதிப்பாடல்களில் கலந்து கொள்ள வேண்டும். பெரியவர்கள் வயலின், ஆர்மோனியம் வாசிக்க, எல்லோரும் உற்சாகமாகப் பாடி, வேதம் வாசித்து ஜெபம் செய்வார்கள்.

வீட்டில் உணவு அருந்துவதிலும் ஓர் ஒழுங்குமுறை கடைப்பிடிக்கப்பட்டது. முதல் மணி அடிக்கும்போது பிள்ளைகளுக்கு உணவு பரிமாறப்படும். அடுத்தது, இரண்டாம் மணி அடிக்கையில் ஆண்கள் அனைவரும் உணவருந்துவர். பின்னர், பெண்களுக்கு உணவு பரிமாறப்படும்.

பிள்ளைகள் பேரப்பிள்ளைகள் அனைவரும் தினமும் நடைபெறும் ஆலய ஆராதனையில் தவறாது பங்கேற்க வேண்டும். ஞாயிறுதோறும் மதிய உணவுக்குப் பின்னர், மக்களும் பேரப்பிள்ளைகளும் அவரவர் தம்தம் வாத்தியக்கருவிகளுடன் வந்து இனிமையாகப் பாடித் தேவனைத் துதிப்பது ஒரு வழக்கமாக இருந்தது. அவ்வாறே ஞாயிறுதோறும் மாலை வேளையில் அனைவரும் ஒரு மணி நேரமாவது உலாவச் செல்வார்கள். இவ்வாறு ஐயரவர்கள் தம் குடும்பத்தை அன்புடன் பராமரித்து, ஒழுங்குடன் தேவ பயத்தில் நடத்தி வந்தார்கள். அவர் தம் குடும்பத்தாரின் மேல் இயற்றிய சில பாடல்களும் அவருடைய இப்பண்பைத் தெளிவாக வெளிப்படுத்துவதைக் காணலாம்.

பீற்றர் அவர்கள் இறைபணியிலிருந்து ஓய்வு பெற்ற பின்னர், பீற்றர் தம்பதியார் 4-7-1938-ஆம் தேதி தங்கள் திருமணப் பொன்விழா கொண்டாடினார்கள். அந்நன்னாளுக்காக அவர் இயற்றியுள்ள கீழ்க்காணும் பாடல் தேவனுக்கு முன்னதாக அவர் எவ்வளவு நன்றியுள்ளவராக இருந்தார் என்பதையும், தம்முடைய பிள்ளைகளும் சந்ததியாரும் இறை சாட்சியுடையவர்களாக, என்றென்றும் பூரண பரிசுத்த பக்தியுள்ள வாழ்க்கை நடத்துபவர்களாக இருக்க வேண்டுமென்ற அவருடைய உள்ளத்தின் ஆவலையும் வெளிப்படுத்துகிறது.

பி.எஸ். பீற்றர் அவர்கள் 1902-ஆம் ஆண்டு குருபட்டம் பெற்று தூத்துக்குடி 1910-11, நசரேத்து 1911-13, இடையன்குடி 191321, புதியம்புத்தூர் 1921-30, கடையனோடை 1930-31, சோலைக்காரன் மடம் 1931-33 ஆகிய இடங்களில் பணியாற்றி 1933-இல் ஓய்வு பெற்றார். இவர் நாசரேத்தில் பணியாற்ற ஆண்டுகளில் அங்குள்ள பரிசுத்த யோவான் ஆசிரியர் பள்ளியில் தலைமை ஆசிரியராகவும் உழைத்திருக்கிறார். அவர் 1940-ஆம் ஆண்டு ஜூன் மாதம் 13-ஆம் தேதி கர்த்தருக்குள் நித்திரையடைந்தார்.

**ஐயர் அவர்களின் நற்பண்புகள்**

நம் பீற்றர் ஐயர் அவர்கள் கடினமான உழைப்பாளியாக இருந்தார். குடும்ப வருவாய் குறைவாயிருந்த அந்நாட்களில், பற்பல இடர்பாடுகளுக்கிடையில் தம் ஊழியத்தை அவர்ம நிறைவேற்ற வேண்டியிருந்தது.

அவர் அதிகக் கண்டிப்புள்ளவராக இருந்தார். ஆயினும் தம் மக்கள் மீதும், சபையார், உறவினர் மீதும் மிகுந்த பாசம் உடையவர். தன்னால் இயன்ற மட்டும் யாவருக்கும் உதவி செய்பவர். நல்ல கரிய நிறம் கொண்ட இவர், கடாய்' மீசை வைத்திருந்தார். எனவே சபை ஊழியர்களான உபதேசிமாராகள் (பெரும்பாலும் அவர்கள் மிஷன் பள்ளிகளில் பணியாற்றும் ஆசிரியர்களாகவே இருந்தனர்.) இவர் தூரத்தில் வருவதைக் காணும் போதே 'புலி வருது! புலி வருது!' என்று ஒருவருக்கொருவர் கூறிச் சிரித்துக் கொள்வர். இது அவர் தம் பண்பிலும், பணியிலும் எவ்வளவு நேர்மை உடையவராகவும், கண்டிப்புள்ளவராகவும் இருந்தார் என்பதைத் தெளிவுபடுத்தும்.

இன்று தென் தமிழ்நாட்டில் திருமணங்களில் பாடப்படும் 'மாப்பூ மகிழம் பூ, மணக்கும் ஞான மல்லிப்பு' என்ற பாடலை இயற்றியவர் நமது பீற்றர் ஐயராவார். இவர் இயற்றிய பிற பாடல் நூல்கள் 'நல்ல சமாரியன் உவமை', 'மார்த்தாள் மரியாள் சரித்திரம்', 'அர்த்தராத்திரி அப்பங்கேட்போன்', மதிகேடன் ஐசுவரியவான்', கீர்த்தனை மாலை.

மா பூ மகிழம் பூ மணக்கும் ஞான மல்லி பூ
பூ பூ புனித பூமாதவித வங்கிஷ பூ
மா பூ மகிழம் பூ மணக்கும் ஞான மல்லி பூ

சரணங்கள்

ஜோதியாய் வந்த பூ ஜொலித்து விளங்கும் ஞான பூ
நீதியாய் வாழ்ந்த பூ நித்தம் நம்மை காக்கும் பூ
ஆதியாய் இருந்த பூ, ஆதரையில் வந்த பூ
தேவ தேவ தேவன்பூ, தேசிகர்கள் புகழும்பூ!

இந்த வாழ்க்கை வரலாற்றை படிக்கும் இன்றைய இளம் சந்ததியினர் இத்தகைய மாதிரியான இறை பணியாற்ற தங்களை ஆண்டவருக்கு ஒப்புவிப்பார்களாக.

இத்தொடரில் விவரித்திருக்கும் மூன்று கவிமணிகளின் படைப்புகளை ' **இலக்கிய புதையல்'** என்ற தலைப்பில் 624 பக்கங்கள் கொண்ட புத்தகம், விலை ரூ.500/- சுமார் 700 கீர்த்தனைகள், கவிதைகள் நிறைந்த நூலை

**மோரியா ஊழியங்கள்,**
**தபால் பெட்டி 7193,**
**31/33 தண்ணீர் தொட்டி சாலை,**
**எம். எம். டி. ஏ. காலனி,**
**அரும்பாக்கம்,**
**சென்னை 600 106.**
**கைபேசி 9962494010**

வெளியிட்டுள்ளனர். தேவையுள்ளோர் தொடர்பு கொள்ளலாம்.

மூன்று கட்டங்களாக தென் திருவாங்கூர் சமஸ்தானத்தில் நடைபெற்ற

# தோள் சீலைப் போராட்டம்

கடந்த பதிவின் தொடர்ச்சி...

J.ஜான் ஞானராஜ் , கல்லிடைகுறிச்சி

## மூன்றாம் கட்ட தோள் சீலைப் போராட்டம் 1857 - 1859

எல். எம். எஸ் தலைமைப் போதகர் அருள்திரு. மீட் ஐயர் அவர்கள் 1830 ஆம் ஆண்டு முதல் இடையிடையே நடத்தப்படுகிற பிரச்சினைகள் சிக்கல்கள் எல்லாவற்றிற்கும் முன்நின்று தாமே நேரிடையாக திருவாங்கூர் சமஸ்தான பிரிட்டிஷ் பிரதிநிதி பிரசிடெண்ட் அவர்களுக்கும், நேரடியாக திருவாங்கூர் சமஸ்தானத்திற்கும் மனுக்கள் எழுதி தீர்வு கண்டு வந்தார். தொடர்ச்சியாக இவர் செய்த முயற்சி காரணமாக 1855 இல் திருவாங்கூர் சமஸ்தானத்தில் அடிமை முறை ஒழிக்கப்பட்டது. அக்காலத்தில் நிலவுடைமையாளர்கள் நாயர் சமூகத்தினரும் அடிமை விவசாயிகளாக நாடார் சமூகத்தினரும் இருந்ததால் தங்களுக்கு விவசாய அடிமை பணியை செய்வதற்கு இனி நாடார் சமூகத்தினர் வரமாட்டார்கள் என்ற அடிப்படையில் மற்றொரு கலவரத்திற்கு உயர் வர்க்க நாயர்கள் திட்டமிட்டு வந்தார்கள். 1853 இல் எல். எம். எஸ் தலைமைப் போதகர் பணியிலிருந்து அருள்திரு. . மீட் ஐயர் அவர்கள் விலகிக் கொண்டார்கள். அவர்களுக்குப் பிறகு அருள்திரு. . ஜான் காக்ஸ் ஐயரவர்கள் பொறுப்பேற்றுக் கொண்டார்கள்.

அருள்திரு. .ஜான் காக்ஸ் ஐயர்வர்களும், அருள்திரு.மீட் ஐயரவர்கள் செய்த நற்செய்தி பணியுடன் கூடிய சமூக விழிப்புணர்வு பணியை மிகச்சிறப்பாக செய்தார்.1858 ஆம் ஆண்டு அக்டோபர் முதல் போராட்டத்திற்கான அறிகுறிகள் தோன்றத் தொடங்கிவிட்டது. நெய்யாற்றின்கரை என்ற இடத்தில் ஒடுக்கப்பட்ட கிறிஸ்தவ பெண் ஒருவர் நடந்து சென்று கொண்டு இருந்த போது அனைவரும் பார்த்துக் கொண்டிருந்த சூழ்நிலையில் தாக்கப்பட்டார் அவளுடைய ரவிக்கை கிழிக்கப்பட்டது, இந்த குற்றம் நீதிமன்றத்தில் நிரூபிக்கப்பட்டது. ஆனாலும் குற்றவாளிக்கு சிறிய அபராதம் மட்டுமே விதிக்கப்பட்டது அவர் விடுதலை செய்யப்பட்டார். அதனால் இது போன்ற பல சம்பவங்கள் நடைபெற தொடங்கிவிட்டன.

## வதந்திகளால் ஏற்பட்ட விளைவுகள்

ஒடுக்கப்பட்ட சமூகப் பெண்களின் ரவிக்கைகளை கிழித்தெறிய அரசாங்கமே ஒரு ஆணையை பிறப்பித்து இருப்பதாக கூறி உயர் வர்க்கத்தினர் தாங்கள் அதை செயல்படுத்த போவதாக அறிவித்தனர். பொது சந்தைகளில் கிறிஸ்தவர்களை தாக்குவதும், கிறிஸ்தவர்கள் மீது மண் வாரி இறைப்பதுமான சம்பவங்களும் நடைபெற்றது. 1858 டிசம்பர் மாதம் சென்னை ஆளுநர் ஹரிஷ் பிரபு டிசம்பர் மாதத்தில் திருவாங்கூர் மகாராஜா சந்திப்பதற்கு வந்தார். அந்த மாதத்தில் விக்டோரியா மகாராணியின் பிரகடனம் வாசிக்கப்பட்டது. விக்டோரியா மகாராணியின் பிரகடனம் வாசிக்கப்பட்ட பின்னரும் ஒடுக்கப்பட்ட சமூகத்தினரை துன்புறுத்துகிற காரியங்கள் அதிகரித்துக் கொண்டே வந்தன.





மகா ராஜாவை சந்தித்த சென்னை ஆளுநர் அரசாங்கத்தின் முழு பொறுப்பை திருவாங்கூர் மகாராஜா கையில் ஒப்படைத்து விட்டதாகவும், பிரிட்டிஷ் அரசாங்கத்தின் கட்டுப்பாட்டில் திருவாங்கூர் சமஸ்தானம் இல்லை என்றும், திருவாங்கூர் மகாராஜா கிறிஸ்தவ மதத்தை தமது சமஸ்தானத்தில் அனுமதிக்கப்போவதில்லை என்றும், ஒடுக்கப்பட்ட சமூக கிறிஸ்தவர்களுக்கு எதிராக உயர் வர்க்கத்தினர் மேற்கொள்ளும் நடவடிக்கைகளுக்கு தடை இல்லை என்றும் வதந்தி கருத்துக்கள் திருவாங்கூர் சமஸ்தானத்தில் பரப்பப்பட்டன.

25. 12.1858 கிறிஸ்மஸ் அன்று சட்டவிரோதமாக மரம் வெட்டியதாக கொடுக்கப்பட்ட புகாரின் பேரில் பாறசாலையை சேர்ந்த அதிகாரி ஒருவர் மிஷனரியிடம் மிஷனரிகளுக்கு ஊதியம் வழங்கும் ஆங்கிலேயர் சார்ந்த ஆங்கிலேய கம்பெனி அதிகாரத்தின் கீழ் திருவாங்கூர் சமஸ்தானம் இல்லை என்றும் மிஷனரிகளின் அதிகாரங்கள் பறிக்கப்பட்டு விட்டது என்றும் தெரிவித்தார். அதன் பிறகு சில நாட்களில் மற்றொரு அதிகாரி சந்தைக்கு சென்று அங்கு தங்களுக்கு அரசாங்கம் அதிகாரம் வழங்கி இருப்பதாக கூறி ரவிக்கையும் மேலாடையும் அணிந்து வந்த நாடார் பெண்களை கேவலமாக பேசியதோடு அவர்களது ரவிக்கைகளை உடலிலிருந்து கிழித்தெறிந்தார், இந்த அதிகாரியின் செயலை உயர் வர்க்கத்தினரும் பின்பற்றத் தொடங்கினர் பிரிட்டிஷ் ஆட்சியாளர்களின் அதிகாரம் திருவாங்கூர் சமஸ்தானத்தில் ஒழிந்துவிட்டது என்ற கருத்துக்கள் பரப்பப்பட்டன. இதன் காரணமாக பாறசாலை வட்டத்தில் 20 நாட்களாக கலவரங்கள் நடக்க ஆரம்பித்தது, பாறசாலை வட்டத்தில் மூன்று தேவாலயங்களும் 3 சிறு வழிபாட்டு இடங்களும் எரிக்கப்பட்டன.

பாறசாலைக்கு அருகில் இருந்த நெய்யூர் வட்டத்தில்

இந்த சூழ்நிலையை பயன்படுத்தி ஒடுக்கப்பட்ட கிறிஸ்தவர்கள் தாக்கப்பட்டனர். உபதேசியார் குருபாதம் வீட்டில் பெரிய மாமரம் ஒன்றை அதிகாரிகள் வெட்டி வீழ்த்தினார்கள், இதற்கு உபதேசியாரின் மகன் எதிர்ப்பு தெரிவித்ததால் அவர் நன்றாக தாக்கப்பட்டார். உபதேசியாரின் மகனின் அழுகுரலை கேட்டு ஓடிவந்த தாயாரும் தந்தையாரும் மயக்கமடையும் வரை தாக்கப்பட்டனர் தாக்கப்பட்ட அந்த அப்பாவிபெண் அப்போதுதான் குழந்தை பெற்றிருந்தாள். அவளும் அவரது கணவரும் கடுமையான காயங்களை அடைந்தனர். நலம் பெற முடியாத அளவிற்கு காயங்கள் இருந்தது. தாசில்தார் இந்த வழக்கை ஏற்றுக் கொள்ள மறுத்துவிட்டார். மிஷனரியின் மனைவி திருமதி பெய்லிஸ் என்பவரது தலையீட்டின் காரணமாக இந்த வழக்கை ஏற்றுக் கொண்டார் இந்த வழக்கில் குற்றம் முழுமையாக நிரூபிக்கப்பட்டதால் குற்றவியல் நீதிமன்றத்திற்கு வழக்கு அனுப்பப்பட்டது. குற்றவாளிகளுக்கு அபராதம் விதிக்கப்பட்டு, அரசு பணியிலிருந்து அவர்கள் அகற்றப்பட்டார்கள்.

25.12.1858 இல் கிறிஸ்துமஸ் அன்று அரசு அதிகாரிகள் தமது பணி ஆட்களுடன் வந்து கல்லங்குழி அருகே நான்கு கிறிஸ்தவர்களை பிடித்து அவர்களை அரசு பணிக்கு கொண்டு போவதாக கூறி கட்டிவைத்து மிகமோசமாக தாக்கினார்கள், நான்கு நாட்கள் சிறையில் வைக்கப்பட்ட பின் அவர்கள் விடுதலை செய்யப்பட்டார்கள். அங்கிருந்த தேவாலயம் இரவில் தீக்கிரையாக்கப்பட்டது. இரண்டு வாரங்களுக்குப் பின்னர் சந்தையில் இரணியலைச் சேர்ந்த பல மக்கள் இரணியல் தலைமைக் காவலர் தலைமையில் ஒடுக்கப்பட்ட கிறிஸ்தவ ஆண்களையும் பெண்களையும் தாக்கி அவர்களுடைய பொருட்களை சூறையாடினர் பணத்தை கொள்ளையடித்தனர்; நகைகளை கைவசப்படுத்திக் கொண்டனர். சந்தையில் அமைதியாக தங்கள் பணிகளை மேற்கொண்டு வந்த ஒடுக்கப்பட்ட கிறிஸ்தவ நாடார்களை கட்டிவைத்து சிறைக்கு அழைத்துச் சென்றனர். மேலாடை அணிந்த இந்து நாடார் பெண்களும் தாக்கப்பட்டார்கள்.

நெய்யூரில் பல வன்முறைச் சம்பவம் நடைபெற்றதால் ரெசிடென்ட் ஏற்பாட்டில் விசாரணைக்கு ஏற்பாடு செய்யப்பட்டது. விசாரணையில் தலைமை காவலர் தற்காலிக பணிநீக்கம் செய்யப்பட்டார். கலவரம் செய்த மற்றவர்களுக்கு சிறிய அபராதம் விதிக்கப்பட்டு அமைதியோடு செயல்படும்படி அறிவுறுத்தி கலவரக்காரர்கள் விடுதலை செய்யப்பட்டார்கள், அன்று இரவே தேவாலயம் எரிக்கப்பட்டது.

### நாகர்கோவில் குற்றவியல் நீதிமன்றத்தில் வழக்கு

நாகர்கோவில் குற்றவியல் நீதிமன்றத்தில் தேவாலயங்களை எரித்தவர்கள் மீதும் எரிக்கப் போவதாக கூறியவர்கள் மீதும் வழக்கு தொடரப்பட்டது. நீதிமன்றத்தின் எழுத்தர்கள் தங்களுடைய உயர் வர்க்க சாதி நண்பர்களை விடுவிப்பதற்காக அனைத்து முயற்சிகளையும் மேற்கொண்டனர். முதலாவது நீதிபதி குற்றவாளிகளுக்கு ஆதரவாக காணப்பட்டார். குற்றவாளிகள் ஜாமீனில் விடுதலை செய்யப்பட்டார்கள். ஆனால் சிறிய குற்றங்களை செய்த ஒடுக்கப்பட்ட நாடார்கள் கைவிலங்குடன் விசாரணைக்கு முன்னிறுத்தப்பட்டார்கள்.

1859 ஜனவரி 23ஆம் நாள் ஞாயிற்றுக்கிழமை இறை வழிபாட்டுக்காக குளத்துவிளை கிராமத்தில் மக்கள் ஒன்று கூடி இருந்த பொழுது சபை உபதேசியாரைக் கைது செய்து வரும்படி சாந்தபுரம் வட்டார அதிகாரி காவலர்களை அனுப்பி வைத்தார். ஞாயிற்றுக்கிழமை என்பதால் தங்களை விட்டு விடும்படி அவர் வேண்டிக் கொண்டார். ஆனால் எந்த குற்றமும் செய்யாத அவரை கைது செய்யும்படி அதிகாரிகள் வற்புறுத்தினர், அந்த கிறிஸ்தவ உபதேசியார் ஆசிரியராகவும் செயல்பட்டார். கைது செய்கின்ற அதிகாரி ஆசிரியரையும் மிஷனரிகளையும் இழிவாக பேசி, அவர்களுடைய ஆடைகளை துண்டு துண்டாகக் கிழித்து சிறையிலடைத்து மோசமாக தாக்கினார்கள். ஒரு வாரம் சிறையில் இருந்த பின்பே அவர்கள் விடுதலை செய்யப்பட்டனர். நாகர்கோவில் வட்டத்தில் உயர் வர்க்க சமூகத்தின் அடக்குமுறை உச்சகட்டத்தை அடைந்தது. 1859 ஜனவரி 4 ஆம் தேதி முதல் 200க்கும் மேற்பட்ட உயர் வர்க்க சமூகத்தினர் வாள், கத்திகள், ஆயுதங்களுடன் தாளக்குடி கிராம கிறிஸ்தவர்களை வீடுகளுக்குள் புகுந்து தாக்கி கிறிஸ்தவ பெண்களின் ரவிகைகளை அகற்றி, அவர்களது உடைகளை கிழித்து மோசமாக தாக்கினார்கள் தாழக்குடி உபதேசியாரையும், பள்ளி ஆசிரியரையும் கொல்லத் திட்டமிட்டார்கள். இதன் விளைவாக அங்கு உள்ள ஆலயம் பல வாரங்களாக மூடப்பட்டது.

ஜனவரி 7ஆம் தேதி அரசு அதிகாரிகளின் தலைமையில் 500 உயர் வர்க்க சமூகத்தினர் ஆயுதத்துடன் குமாரபுரம் கிராமத்துக்கு வந்து சபை உபதேசியாரையும் அவரது மனைவியையும் தேடினார்கள். இருவரும் தப்பி சென்றுவிட்டதால், அவரை பார்க்க வந்த மற்றொரு புதிய உபதேசியாரைப் பிடித்து கொடுமையாக அடித்து சிறையில் அடைத்தார்கள். மேலும் கிறிஸ்தவர்கள் வீட்டுக்குள் பலவந்தமாக புகுந்து உடைமைகளை சேதப்படுத்தி கிறிஸ்தவ பெண்களின் மேலாடைகளை ரவிக்கைக்களையும் கிழித்து நிர்வாணமாக்கி கீழ்த்தரமான நடவடிக்கையில் ஈடுபட்டார்கள். இதேபோன்ற வன்முறைகள் ஆரல்வாய்மொழி மற்றும் செம்மன் விளை கிராமத்திலும் நடைபெற்றன.

அந்த வாரம் ஞாயிறன்று இதே வன்முறைக் கூட்டம் காட்டுப்புதூரில் தேவாலயத்தில் வழிபாடு நடந்து கொண்டிருந்த பொழுது வழிபாட்டில் பங்கு பெற்றவர்களையும் கடுமையாக தாக்கியது கடைசியில் தேவாலயத்தை பூட்டி சாவியை எடுத்துக் கொண்டு நாகர்கோவிலுக்கு சென்றுவிட்டது.

29.01.1859 அன்று நாகர்கோவில் அருகே ஒரு தேவாலயமும் 31.01.1859 அன்று நாகர்கோவிலை அடுத்து ஜேம்ஸ் டவுன் வட்டத்தில் இருந்த ஓர் கிராமத்தில் ஒரு தேவாலயமும் ஒடுக்கப்பட்ட கிறிஸ்தவ நாடார்களின் 3 வீடுகளும் தீக்கிரையாக்கப்பட்டன. மொத்தமாக இந்த பகுதியில் ஒன்பது ஆலயங்களும், மூன்று பள்ளிக்கூடங்களும் அழிக்கப்பட்டது. ஒடுக்கப்பட்ட சமூகத்தவரின் வீடுகள் திட்டுவிளையிலும் கோட்டாரிலும் எரிக்கப்பட்டன.

### மத வேறுபாடின்றி இணைந்து போராடிய ஒடுக்கப்பட்ட சமூகத்தினர்

ஆட்சி அதிகாரம், காவல்துறை, படைப்பிரிவுகள், அரசு அதிகாரிகள் என அனைத்தும் உயர் வர்க்கத்தினரைக் கொண்டதாக தென் திருவாங்கூர் சமஸ்தானத்தில் இருந்தபோதிலும் முதலாம் இரண்டாம் தோள்சீலைப் போராட்டத்தை விட இந்த மூன்றாம் போராட்டம் தீவிரமாக நடைபெறுவதற்கு ஒடுக்கப்பட்ட 18 சமூகத்தினரும் தங்களுக்குள் மத வேறுபாடின்றி

ஒருங்கிணைந்து செயல்பட்டது ஒரு காரணம் ஆகும். குறிப்பாக திருவாங்கூரில் ஒடுக்கப்பட்ட 18 சமூகத்தில் பெரும்பான்மையாக இருந்த நாடார் சமூகத்தினரில் கிறிஸ்தவர்களாக மதம் மாறியவர்களும் மதம் மாறாமல் இந்துக்களாக இருந்தவர்களும் தங்களுடைய உயிரையும் பணயம் வைத்து வீதிகளுக்கு வந்து போராடினர். போராட்ட வெற்றிக்கு இதுவும் ஒரு மூல காரணம்.

**போராட்டக்களத்தை பின்னடைவுக்கு கொண்டு சென்ற ஊர் நாடான்கள் குடும்பத்தினர்**

இந்த போராட்ட காலகட்டத்தில் அகஸ்தீஸ்வரம் வட்டாரத்திலிருந்த ஊர் நாடான்கள் எனப்படும் பெரும் நிலவுடைமையாளர்கள் ஆக இருந்த குறிப்பிட்ட சில குடும்பங்கள், இந்த தோள்சீலை போராட்டத்தில் ஒடுக்கப்பட்ட தங்களது சமூகத்திற்கு ஆதரவு தெரிவிக்காமல் ஒடுக்கிய உயர் வர்க்க சமூகத்திற்கு ஆதரவாக செயல்பட்டு வந்தார்கள். அதற்காக அவர்களுக்கு திருவாங்கூர் சமஸ்தானத்தால் சில உரிமைகள் கொடுக்கப்பட்டிருந்தது. மேலாடை அணியும் உரிமையையும் இவர்கள் பெற்றிருந்தனர். அகஸ்தீஸ்வரம் வட்டார நாடான்கள் எனும் குறிப்பிட்ட குடும்பத்தினர்களால் இப் போராட்டத்தில் பின்னடைவு ஏற்பட்டது என்பது ஒரு கசப்பான உண்மை.

**நெய்யூர் வட்டாரத்திற்கு ஏற்பட்ட சோதனை**

1859 தொடக்கத்தில் நெய்யூரில் ஒரு பெரும் கலகத்தை தொடங்குவதற்கு உயர் வர்க்க கலகக்காரர்கள் தெரிவு செய்த நாள் தலைமை மிஷனரி கடற்கரை விடுமுறை தலமான முட்டத்தில் தங்கி இருந்த நாளாகும். மிகவும் எச்சரிக்கையாக மிஷனரி இருக்கும் முட்டத்திற்கும் நெய்யூர்க்கும் இடையே இருந்த எல்லா தொடர்புகளையும் கலவரக்காரர்கள் துண்டித்துவிட்டு, இரு கிராமங்களுக்கு இடையே அனேக தங்களுடைய ஆட்களை நிறுத்தி வைத்து, நெய்யூரில் உள்ளவர்களுக்கு உதவி செய்வதற்கு காப்பாற்றுவதற்கு மிஷனரிகள் யாரும் வராத சூழ்நிலையை உருவாக்கி தாக்குதல் முயற்சியை மேற்கொள்ள திட்டமிட்டார்கள்.

இதை அறிந்த ஒரு பெண் பைத்தியம் பிடித்தவர் போல தன்னை மாற்றிக்கொண்டு மிக விரைவாக ஓடி பல கிலோமீட்டர் தூரம் சென்று முட்டம் கிராமத்தை அடைந்து முட்டம் கிராமத்தில் தங்கி இருந்த அருள்திரு. .பேய்லிஸ் ஐயர் அவர்களிடம் தனது ரவிக்கைக்குள் ஒளித்து வைத்திருந்த ரகசிய கடிதம் ஒன்றை கொடுத்தார். அதில் உயர் வர்க்கத்தினர் நெய்யூரைத் தாக்குவதற்கு திட்டமிட்டிருந்த ரகசியத் திட்டம் குறிப்பிடப்பட்டிருந்தது. அடுத்த நாள் காலை அருள்திரு. பேய்லிஸ் ஐயரவர்கள் ஒரு குதிரை மூலம் அவசரமாக நெய்யூர் வந்தடைந்தார் அதைப்போலவே சாந்தபுரம் மிஷனரி அருள்திரு. லூயிஸ், ஜேம்ஸ் டவுன் மிஷனரி அருள்திரு. .ரசல் ஆகியோரும் நெய்யூர் வந்து சேர்ந்தார்கள் பின்னர் அந்த மூவரும் திருவனந்தபுரம் சென்று தலைமைப் போதகர் ஜான் காக்ஸ் ஐய்யரவர்களுடன் பிரிட்டிஷ் பிரதிநிதியையும் மகாராஜாவையும் சந்தித்து தாங்கள் படும் துயரங்களை எடுத்துரைத்தார்கள். கலவரத்தை தடுக்க நடவடிக்கை எடுக்கும்படி கேட்டுக் கொண்டார்கள். திருவாங்கூர் சமஸ்தான படைப்பிரிவு ஒன்று கலவரத்தை அடக்குவதற்காக நெய்யூர் வட்டாரத்திற்கு அனுப்பப்பட்டது.

**போராட்டத்தை முடிவுக்கு கொண்டுவந்த எல். எம். எஸ் மிஷனரிகளின் சீரிய முயற்சியும் சட்டப்பூர்வ பிரகடனமும்**

1859 பிப்ரவரி மாதத்தில் L.M.S. மிஷனரிகள் திருவாங்கூர் மகாராஜாவுக்கு ஒரு மனு கொடுத்தனர் இந்த மனுவிற்கு அங்கிருந்து பதில் இல்லாததால் அதே மனுவை சென்னையில் இருந்த பிரிட்டிஷ் ஆளுநருக்கு அனுப்பி வைத்தார்கள். இந்தியாவை ஆட்சி செய்து வந்த இங்கிலாந்து மகாராணி விக்டோரியா பேரரசி அவர்களுக்கும் தாங்கள் அனுபவித்து வருகிற கொடுமைகளை மிக விவரமாக எழுதி மேல் நடவடிக்கை எடுக்க வேண்டினர். மிஷனரிகளின் தொடர் புகார்களைத் தொடர்ந்து இந்திய நாட்டுக்கான ஆங்கிலேயே செயலாளர் சென்னையின் புதிய ஆளுநராக நியமிக்கப்பட்டிருந்த சர். சார்லஸ் டிரெவெல்யான் அவர்களை இந்த விஷயத்தில் விசாரித்து நடவடிக்கை எடுக்க கேட்டுக்கொண்டார்கள்.

சென்னை ஆளுநர் சர். சார்லஸ் டிரெவெல்யான் உறுதியான மேல் நடவடிக்கை எடுக்கும்படி திருவாங்கூர் சமஸ்தானத்திற்கு கண்டிப்பான கடிதமொன்றை அனுப்பினார். இந்த கண்டிப்பான கடிதத்தின் மூலமாக 26 .07.1859 இல் திருவாங்கூர் மகாராஜா சட்டபூர்வ பிரகடனத்தை வெளியிட்டார். அதன்படி ஒடுக்கப்பட்ட அனைத்து நாடார் சமூக பெண்களும் தாங்கள் விரும்பியபடி தங்களது மார்பகத்தை மூடி உடை உடுத்திக் கொள்ளும் உரிமையைப் பெற்றனர். இந்த சலுகை முதலில் ஒடுக்கப்பட்ட 18 சமூகத்தில் நாடார் சமூகத்திற்கு மட்டுமே கொடுக்கப்பட்டது. 1865 ஆம் ஆண்டு முதல் ஈழவர் சமூக பெண்களுக்கும் மற்றும் இதர 16 ஒடுக்கப்பட்ட சமூக பெண்களுக்கும் மேலாடை அணியும் உரிமை வழங்கப்பட்டு மற்றொரு பிரகடனம் திருவாங்கூர் சமஸ்தான அரசாங்கத்தால் வெளியிடப்பட்டது. இந்தப் பிரகடனம் வெளியிடப்பட்ட பின்பு மூன்றாம் கட்ட தோள்சீலைப் போராட்டம் முடிவுக்கு வந்தது.

**அய்யா வைகுண்டர் முத்துக்குட்டி சுவாமிகளின் விழிப்புணர்வு பங்களிப்பு**

இரண்டாம், மூன்றாம் தோள்சீலை போராட்ட காலத்திற்கு இடைப்பட்ட காலத்தில் அய்யா வைகுண்டர் என்று அழைக்கப்படும் அய்யா முத்துக்குட்டி சுவாமிகள் அவர்கள் (1809 - 1851) 1836 முதல் 1851 வரை ஒடுக்கப்பட்ட 18 சமூகத்தினர் மத்தியில் விழிப்புணர்வு பணியை சிறப்பாக செய்தார். பொன்னுமாடநாடார் - வெயிலாள் தம்பதியருக்கு மகனாக 1809 இல் இவர் பிறந்தார். தொடக்க காலத்தில் தெற்கு தாமரைக்குளம் எல். எம். எஸ் தேவாலயத்தில் ஆலய பணியாளராக இவர் பணி செய்தது குறித்து எல். எம். எஸ் குறிப்புகளில் காணப்படுகிறது. திருவாங்கூர் சமஸ்தான அரசின் ஒடுக்குமுறைகளை எதிர்த்து இவர் தீவிரமாக செயல்பட விரும்பியதாகவும் அக்கால மிஷனரிமார்கள் மிதமாக செயல்பட விரும்பியதாகவும் அதன் விளைவாக இவர் தனி மார்க்கம் கண்டதாகவும் கூறப்படுகிறது.

இவர் அக்காலத்தில் தொடங்கிய வரிகொடா போராட்டம் திருவாங்கூர் சமஸ்தான அரசாங்கத்தை கடுமையாக பாதித்ததால் இவர் திருவனந்தபுரத்திற்கு அழைத்துச் செல்லப்பட்டு சிறையில் அடைக்கப்பட்டார், பின்னர் விடுவிக்கப்பட்டார். அக்காலத்தில் அவருக்கு உணவில் விஷம் வைக்கப்பட்டதாக சொல்லப்படுகிறது. திருவனந்தபுரத்தில் இருந்து விடுதலையாகி, தமது சொந்த இருப்பிடமான சாமி தோப்புக்கு வந்த சில காலங்களில் இவர் மரணமடைந்தார். இவரால் சொல்லப்பட்டு அவருடைய சீடர்களின் மூலமாக நூலாக்கம் பெற்ற அகிலத்திரட்டு நூல் அக்காலத்தில் தென்

திருவாங்கூர் சமஸ்தானத்தில் நடைபெற்ற அடக்குமுறைகளையும் ஒடுக்குமுறைகளையும் தெளிவாக காட்டுகிறது. இவர் தொடங்கிய அய்யாவழி அன்பு மார்க்கம் இன்றளவும் செயல்பட்டு வருகிறது. இந்த மார்க்கத்தில் சிலை வழிபாடு இல்லை, ஞாயிற்றுக்கிழமை இந்த மார்க்கத்தின் புனித நாளாக ஏற்றுக்கொள்ளப்படுகிறது, ஞாயிற்றுக்கிழமைகளில் அகிலத்திரட்டு ஏடு வாசிக்கப்படுகிறது மற்றும் சமத்துவ அன்னதானம் வழங்கப்படுகிறது.

**மாற்றுக்கருத்து என்ற போர்வையில் தோள்சீலைப் போராட்டம் குறித்து கூறப்படும் வரலாற்றுத் திரிபுகள்**

தென் திருவாங்கூர் சமஸ்தானத்தில் அடக்குமுறைகள் இல்லை, ஒடுக்குமுறைகளும் இல்லை, அனைத்து சமூகத்தவரும் சரிசமமாகவே நடத்தப்பட்டார்கள், தோள்சீலை போராட்டம் என்ற ஒரு போராட்டத்தை எல். எம். எஸ் மிஷனரிகள் தான் உருவாக்கினார்கள் என வரலாற்றுக்கு புறம்பான கருத்துக்களை சமீப காலமாக மதவாதிகள் இணையதளம் வாயிலாகவும், தோள்சீலைக் கலகம் தெரிந்த பொய்கள் தெரியாத உண்மைகள் என்ற புரட்டு நூல்கள் மூலமாகவும் பரப்பி வருகின்ற இந்த காலகட்டத்தில் இந்தக் கலகத்தை குறித்தும் இதில் நேரடியாக பங்கு பெற்றவர்கள் குறித்தும் கூடுதலாக அறிந்து கொள்வது மிக மிக அவசியம், அதோடு மட்டுமல்லாமல் இப்படிப்பட்ட புரட்டுநூல்களுக்கு மறுப்பு தெரிவிப்பதற்கு உண்மை வரலாற்றை நாம் அறிந்து கொள்வது மிக அவசியம்.

---

சமகால சமூக சேவகர்

# மாரிமுத்து

அருள்திரு முனைவர் ச. இராஜசேகரன்

'கர்த்தருடைய ஆவியானவர் என்மேலிருக்கிறார்; தரித்திரருக்குச் சுவிசேஷத்தைப் பிரசங்கிக்கும்படி என்னை அபிஷேகம்பண்ணினார்; இருதயம் நருங்குண்டவர்களைக் குணமாக்கவும், சிறைப்பட்டவர்களுக்கு விடுதலையையும், குருடருக்குப் பார்வையையும் பிரசித்தப்படுத்தவும், நொறுங்குண்டவர்களை விடுதலையாக்கவும், கர்த்தருடைய அநுக்கிரக வருஷத்தைப் பிரசித்தப்படுத்தவும், என்னை அனுப்பினார்' என்ற வாக்கியங்களை ஜெபஆலயத்தில் வாசித்த இயேசு 'இன்றைய தினம் இது நிறைவேறிற்று' என்றார். நற்செய்திப்பணி மற்றும் நற்பணி ஆகியவற்றை இணைத்து அருட்பணி என்று இவ்வாக்கியங்களை ஏசாயா எழுதினான். இன்று நற்செய்திப்பணியையும் நற்பணியையும் இருவேறு கோணத்தில் பார்த்ததால் அருட்பணி அந்தரத்தில் தொங்குகிறது. நற்செய்தி அறிவிப்பவர்கள் பந்தி விசாரிக்கும் மக்கள் சேவையை தகுதியற்ற பணியாக பேதுரு சொன்னதன் (அப்.6:2) விளைவாக சமூகப்பணி இரண்டாம் பணியாகவே முதல் உலகப்போர் வரை கருதப்பட்டது. ஆனால் இந்த சிறியவர்களுக்கு எதை செய்தீர்களோ அதை எனக்கே செய்தீர்கள், உங்களுக்கே நித்திய ஜீவன் என்ற இயேசுவின் போதனைகள், முதல் மற்றும் இரண்டாம் உலகப்போரில் காயப்பட்டவர்கள், உணவு, உடை, உறைவிடம் மற்றும் உடமைகளை இழந்தவர்களுக்கு சேவை செய்ய உந்துதலாக இருந்தது. அதனால் கிறிஸ்தவ அருட்பணி அடுத்த கட்டத்திற்கு எடுத்துச்செல்லப்பட்டதன் விளைவாக நற்செய்திப்பணியும் நற்பணியும் இணைந்த அருட்பணி செழிக்க ஆரம்பித்தது. சமூக சேவை என்பது கடவுளின் மேலும் கடவுள் ஏற்படுத்திய மனித சமூகத்தின் மேலும் கடவுளின் கருணையும் கடமையும் ஒன்று கலந்த பணியாக கிறிஸ்தவ மிஷனெரிகள் செயல்படுத்தினார்கள். அவர்களுடைய சமூகப்பணியால்தான் இன்று இந்தியா கல்வி, மருத்துவம், விஞ்ஞானம், தொழில்நுட்பம், போக்குவரத்து போன்ற வளர்ச்சிகளைக் கண்டிருக்கிறது. இந்தியர்கள் சமூக சேவையில் சளைத்தவர்கள் அல்ல என்பதற்கு பல்வேறு ஆதாரங்கள் உண்டு. இக்காலத்திலேயே இந்தியாவில் சமூகப்பணியாற்றும் சகோதரன் மாரிமுத்து அவர்களைப்பற்றி நான் எழுதுவதில் மிகவும் மகிழ்ச்சியடைகிறேன். தென்காசி அருகில் உள்ள ஒரு கிராமத்தில் ஏழைப் பெற்றோருக்கு பத்தாவது மகனாகப் பிறந்த முத்துவை, வறுமையின் காரணமாக 10ம் வகுப்பு வரைதான் படிக்கவைத்தார்கள். படிக்கும் போதும் படித்த பின்பும் அப்பகுதியில் அதிகமானோர் செய்யும் பீடித்தொழில் மற்றும் சித்தாள் வேலையில் ஈடுபட்டு, துன்மார்க்கமான வாழ்வில் வளர்ந்துகொண்டிருந்தார். குப்பையில் இருப்போரை கோபுரத்தில் ஏற்றும் கடவுளை அப்போது அவர் அறியவில்லை. ஆனால்






கோபுரத்தில் இருந்தாலும் குப்பையிலிருப்போரை தேடிவந்த கடவுள் இவரையும் தேடி வந்தார். நண்பர் ஒருவர் மூலமாக கிறிஸ்துவையே அறியாமல் கிறிஸ்தவ வேதாகமக் கல்லூரியில் சேர்க்கப்பட்டார். வேதாகக் கல்லூரியில் உள்ளவர்களின் கிறிஸ்தவ வாழ்வு இவரை கிறிஸ்துவை ஏற்றுக்கொள்ளவும், அவருடைய பணிக்காக தன் வாழ்வை அர்ப்பணிக்கவும் பரிசுத்த ஆவியானவர் தூண்டினார். மறுஉத்தரவை விசுவாசம் மற்றும் கீழ்படிதல் மூலம் வெளிப்படுத்தி 24 ஆண்டுகளாக யூத் வித் எ மிஷன் (<:$0) என்னும் உலகளாவிய நிறுவனத்தில் இணைந்து நற்செய்திப்பணியையும் நற்பணியையும் சென்னை, திருச்சி அத்துடன் கடந்த 4 ஆண்டுகளாக மும்பையில் குடும்பமாக ஆற்றிவருகிறார்.

**இறைப்பணியாளர்களுக்கு சமூக சேவை**

என்னை கனம் பண்ணுகிறவனை நான் கனம் பண்ணுவேன் என்ற கடவுளின் வார்த்தைபடி ஏழை ஊழியர்களுக்கு இருசக்கர வாகனங்கள் கொடுப்பதும், ஒவ்வொரு மாதமும் நல்ல அரிசி மற்றும் பணஉதவி செய்வது, திருமணம் நடத்திவைப்பது, பல்வேறு நாடுகளுக்கு அனுப்புவது, ஆன்மீக மற்றும் சமூகப்போதனைகளைக் கொடுப்பதும் இவரது அன்றாட சமூகப்பணியாகும்.

**விவசாயிகளுக்கு சமூக சேவை**

நாட்டின் முதுகெலும்பாக இருக்கும் விவசாயிகளுக்கென கிறிஸ்துமஸ் காலங்களில் அவர்கள் பணிபுரியும் வயல்வெளிகளுக்கே சென்று நான் எழுதிய வாழ்த்து மடலுடன் பிரியாணி மற்றும் கேக் கொடுத்து அவர்களுக்கு நற்செய்தியை அறிவித்து மகிழ்வித்து மகிழ்ந்தோம்.

**துப்புறவு தொழிலாளர்களுக்கு சமூக சேவை**

வியாதி வரும் முன்பு காத்து, அசுத்தங்களை எல்லாம் சுத்தமாக்கி இறைப்பணியாற்றும் தூய்மைப் பணியாளர்களுக்கு அதிகாலையிலேயே சூடான தேநீர், கேக், அத்துடன் துப்புரவாளர் களுக்கு இயேசுவின் பிறந்தநாள் வாழத்துக்களைக் கொடுத்து கிறிஸ்துவின் பிறப்பை அவர்களுடன் கொண்டாடினோம்.

**காவல்துறையினர்க்கு சமூக சேவை**

காவல்துறையினரை பொதுவாக யாருக்கும் பிடிக்காது, அவர்களை மாமா என்று கேலி செய்வதும், அவர்களைக் கண்டால் விலகிப்போகிற மனிதர்களிடையே அவர்கள் வெயில், மழை, குளிர் என்று எதையும் பாராமல் மக்களைக் காக்க நடுரோட்டிலும் காட்டிலும், திருடர்கள் மற்றும் கொலைக்காரர்கள் பின்னாக ஒடிக்கொண்டிருக்கும் அவர்களுக்கு நம்மாலான உதவி செய்யவேண்டும் என்பது முத்துவின் மனவிருப்பம். கிறிஸ்துமஸ் காலங்களில் அவர்களுக்கு நான் எழுதிய காவலர்களுக்கு காவல் தெய்வம் இயேசுவின் பிறந்தநாள் வாழ்த்துக்கள் என்னும் வாழ்த்து மடலுடன் கேக், சிறு டவல், வசன அட்டை, போன்றவற்றை அவர்கள் இருக்கும் இடத்திற்கு (ரோட்டில் & அலுவலகத்தில்) சென்று வாழ்த்துப்பாடல் பாடி பரிசுகளைக் கொடுப்பது வழக்கம். ஜல்லிக்கட்டு நேரத்தில் திருச்சி ஏசிபி ஐ நேரில் சந்தித்து காவலர்களுக்கு குடிநீர் பாட்டில் மற்றும் ஆரஞ்சு பழம் கொடுத்தது அவர்களை மகிழ்ச்சியில் ஆழ்த்தியது. காவல் நிலையங்களை தூய்மைப்படுத்துவதும், அவர்களுக்கு கொரோனா காலங்களில் சானிடைசர், முகக்கவசம், குடிநீர் வழங்கி மும்பையிலும் இப்பணியைத் தொடர்கிறார். அத்துடன் மழைக் காலங்களில் அவர்களுடன் சேர்ந்து இவருடைய குழுவினர் சாலை சீரமைப்பு, போக்குவரத்தை ஒழுங்கு செய்யும் பணியிலும் இணைந்து பணியாற்றியதால் மும்பை காவல்துறை இவருக்கு பாராட்டு சான்றிதழ் வழங்கி பெருமைப்படுத்தியது.

**ஆபாச வலைதளங்களில் அடிமையாயிருப்போருக்கு சமூக சேவை**

ஆபாசவலைதளங்களில் அடிமைப்பட்டு தங்கள் நேரம், பணம், மற்றும் மனிதவளத்தை வீணடிப்பதுடன் தன்னையும் மற்றவர்களையும் அத்துடன் ஒட்டுமொத்த நாட்டின் நலனையும் பாதிக்கும் இவர்களுக்காக 'பண்பாளர்களைப் பாழாக்கும் போர்னோகிராபி' என்ற தலைப்பில் நான் எழுதிய சிறிய புத்தகத்தை தமிழிலும் ஆங்கிலத்திலும் 30,000 பிரதி வெளியிட்டு, திருச்சியில் ஒவ்வொரு வீடுகள், தெருக்கள், பேருந்துகளில் என்று அநேக இடங்களில் விநியோகித்தோம்.

**கொரோனா பரவல் மற்றும் வெள்ளப்பெருக்கில் சமூக சேவை**

மும்பையில் கொரோனா கோரதாண்டவம் ஆடிய நேரத்திலும் அதனைத்தொடர்ந்த வெள்ளப்பெருக்கிலும் ஏழை மக்களுக்கும், ஆதிவாசி மக்கள், குடிசைப்பகுதி மக்களுக்கும், புலம் பெயர்ந்தவர்களுக்கும், பிச்சைக்காரர்களுக்கும், குப்பை பொறுக்குகிறவர்களுக்கும், ரிக்க்ஷா ஒட்டுநர்களுக்கும், விதவைகளுக்கும், உணவு, போர்வை, சோப், பவுடர், குடிநீர், கபசுரநீர், முட்டை, பழம், சானிடைசர், முகக்கவசம், போன்றவை பல்லாயிரம் மக்களுக்கு அனுதினமும் வழங்கினார். பலருக்கு ஆடு, மாடு, பெட்டிக்கடை, பன்றி, தள்ளுவண்டி, பணம் போன்றவைக் கொடுத்து சுயதொழில் தொடங்க உதவுகிறார். புலம்பெயர்ந்த சிலரை சொந்த ஊரில் கொண்டு சென்று விட்டார்கள், 10,000 கி.மீக்கும் மேல் வேன் ஒட்டிச்சென்று ஊழியம் செய்தது மகிழ்ச்சியாக இருந்ததாக முத்துவின் உடன் ஊழியர் ஜோன்ஸ் பெருமைப்படுகிறார். ராஜன் பார்வையற்றோருக்கு ஊழியம் செய்வதுடன் சமையல் செய்வதும், வேன் ஒட்டுவதுமாக சிறப்பான சேவையை முத்துவுடன் சேர்ந்து சலிக்காமல் செய்துகொண்டிருக்கிறார்.

**அரவாணிகளுக்கு சமூக சேவை**

மும்பையில் அரவானிகள் அதிகம். அவர்களை



பொதுவாக மக்கள் ஏற்பதில்லை. அவர்கள் தவறான பாதைக்கு செல்வதற்கு குடும்பம் மற்றும் சமுதாயம் காரணமாகிறது. அவர்களுடைய வாழ்வாதாரத்திற்காக வேறு வழியில்லாமல் பாலியல் தொழில் செய்கிறார்கள், சிலர் உணர்ந்தும் மீண்டும் பழைய வாழ்வுக்கு போகமுடியாமல் தவிக்கிறார்கள் என்று முத்துவுடன் ஊழியம் செய்யும் சகோ.சிம்பு கூறுகிறார். இயேசுவைப்போல நேசித்து, ஏற்றுக்கொள்வதால் அவர்கள் மனந்திறந்து பேசும் போது அவர்களுடன் இயேசுவின் நம்பிக்கை மற்றும் சமாதான நற்செய்தியை கூறுகிறார்கள். எங்களிடம் நல்ல முறையாக நடந்துகொள்வதுடன், ஜெபித்துக்கொண்டு, ஆலயம் வருவதற்கு ஆவல் காண்பிக்கின்றனர், அத்துடன் பல்வேறு நலதிட்டம் செய்யவும் உதவுகிறார்கள் என்கின்றனர்.

**விபாச்சாரப் பெண்களுக்கு சமூக சேவை**

மும்பையில் சிகப்பு விளக்குப்பகுதிகள் அதிகம். அங்குள்ள பெண்களில் பலர் விபச்சாரத்திற்கு பல்வேறு காரணங்களால் தள்ளப்பட்டிருக்கிறார்கள். அவர்களுக்கு மாதந்தோறும் மளிகைப்பொருள் வழங்கி விபச்சாரத்திற்கு முழுக்குப்போட உதவுகிறதுடன், அவர்களை மீட்க மிகவும் துணிச்சலுடன் அவமானத்தைக் கருதாமல், அவர்களிடம் சென்று, பேசி, காவல்துறைக்கு தகவல் கொடுத்து சிலரை மீட்டிருக்கிறார்கள். அவர்களை மீட்பது சமூகத்திற்கு ஆற்றும் பெருஞ்சேவை. ஆம்புலன்ஸ் மற்றும் மருத்துவ சேவை கொரோனா காலத்தில் பாதிக்கப்பட்டவர்களை மருத்துவமனைக்கு கொண்டு செல்ல ஒரு தன்னார்வ நிறுவனம் கொடுத்த 2 ஆம்புலனஸ் மூலமும், பின்பு சொந்தமாக அனைத்து வசதிகளுடன், மரித்தவரின் உடலையும் எடுத்துச்செல்லும் வசதியுடனும் ஒரு புதிய ஆம்புலன்ஸ் வாங்கி அதன் மூலம் ஏறக்குறைய 600 பேர்க்கும் மேலானோரின் உயிரைக் காப்பாற்றியிருக்கிறார்கள் என்று முத்துவுடன் பணிபுரியும் நர்ஸிங் படித்த டேனி சொல்கிறார்.

**தற்கொலை செய்கிறவர்களுக்கு சமூக சேவை**

தற்கொலை செய்துகொள்கிறவர்களுக்கான ஆற்றுப்படுத்தும் சேவையில் அதன் சிறப்பு பயிற்சி பெற்ற நிறுவனத்துடன் சேர்ந்து தற்கொலையை தடுக்கும் பணியிலும் ஈடுபடுகிறார்கள். அலைபேசியில் பெரும்பாலானோர் பிரார்த்திக்க கேட்பதாக கூறுகிறார்கள்.

மிகவும் எளிமையும் விசுவாசத்தில் உறுதியும், எந்த உயர்விலும் அடக்கத்தையும் குழுவாக சேர்ந்து பணி செய்வதில் திறம்படைத்தவர் மாரிமுத்து. ஏழைகள், ஊழியர்கள், பல்வேறு சிக்கல்களில் சிக்கித்தவிப்போர் மீது இரக்கம் கொள்பவர், சொல்வதைக்காட்டிலும் செயலில் அதிகம் காட்டவேண்டும் என்பதில் அதிக அக்கறைக் கொண்டவர். இவருடன் இவருடைய மனைவி கவிதா, பிள்ளைகள் பிரின்சி, பிரின்ஸ் மற்றும் பிரசியஸ் ஆகியோரும் உடன் ஊழியர்களும் குழுவாக சேர்ந்து ஜெபித்து, உபவாசித்து, அர்ப்பணிப்போடு செயல்படுகிறார்கள். சமூகப்பொறுப்புடையோரே சமூகசேவையில் ஈடுபடமுடியும் என்ற கூற்றுக்கு ஏற்ப, கடவுளின் கிருபையுடனும் மனிதர்களின் தயவுடனும், விசுவாசப்பாதையில் பயணிக்கிறார்கள். முத்து பெரும்பாலும் பூஜ்ஜியப் பொருளாதாரத்துடன் திட்டமிடுவார், விசுவாசத்துடன் துவங்குவார், அவரைத்தேடி அல்லது அவர் தேடிச்செல்வோர் உதவிகரம் நீட்டுவதில் கடவுளுடைய ஆற்றலை ஒவ்வொரு திட்டப்பணிகளிலும் அன்றாடம் காண்கிறார்.

சமூகப்பணி செய்ய சமூகத்தை அறிந்து, புரிந்துக்கொள்வதுடன் தானும் அனுபவித்தால்தான் அதன் உண்மை நிலையை உணரமுடியும், அதற்கேற்ப தேவைகளை சந்திக்கமுடியும் என்ற முடிவில் ஒரு நாள் முழுவதும் பிச்சைக்காரராக மும்பையில் இருந்து 176 ரூ சம்பாதித்திருக்கிறார். அத்துடன் ஒரு இரவு முழுவதும் ரோட்டில் பிச்சைக்காரர்களுடன் தங்கி இருக்கிறார். காசு இல்லாமல் ஒரு நாள் எங்கேயாவது வேலை செய்து சாப்பிடவேண்டும் என்னும் தீர்மானத்துடன் வேலைத்தேடி அலைந்து, கிடைத்த வேலையில் கிடைத்த பணத்தை வைத்து சாப்பிட்டிருக்கிறார்கள். இப்படிப்பட்ட கடினமான பயிற்சிகளுக்கு தன்னையும் தன் உடன் ஊழியர்களை ஊக்கப்படுத்தும் பல்வேறு யுக்திகளைக் கையாளுகிறார். கடவுள் இவருக்குத் தேவையான அனைத்து உதவிகள், சரீரசுகம் கொடுத்து, மகிழ்ச்சியுடன் ஈடுபட்டு, துரிதமாக செயல்பட்டு, சமூக சேவைகளிடையே எந்த வேற்றுமையும், ஏற்றத்தாழ்வும் காணாமல் கடவுளுக்கு செய்வதாக மக்களுக்கு செய்கிறார். சென்ரல் மும்பை கிறிஸ்டியன் அசோசியேஷன் மற்றும் பல்வேறு தொண்டு நிறுவனங்கள் சான்றிதழ் வழங்கி இவருடைய சமூக சேவைகளைப் பாராட்டியிருக்கிறார்கள். கிறிஸ்தவ வரலாற்றுச் சுவடுகள் பத்திரிக்கை சார்பாக நாமும் வாழ்த்துகிறோம், இவர்களின் சமூகசேவை தொடர ஜெபிப்போம், உதவுவோம்.





### நீலகிரி தேயிலை எஸ்டேட்டுகளில் ஊழியம்

# முதல் நற்செய்திப் பணியாளர் கார்ள் சத்தியநாதன்

பிலிப் கே. மல்லி கோத்தகிரி, நீலகிரி

1856 - 1912 ஆங்கிலேயர், கி.பி. 19-ஆம் நூற்றாண்டு முதற்கொண்டு நீலகிரியில் தேயிலை தோட்டங்களை உருவாக்கி வந்தனர். இத்தோட்டங்களில் பணியாற்ற ஆயிரக்கணக்கான அளவில் சமவெளி பகுதிகளிலிருந்து தொழிலாளர்கள் வந்து குடியேறினர். இம்மக்களிடையே சுவிசேஷத்தை அறிவிக்க வேண்டுமென்ற வாஞ்சை சில தோட்ட அதிபர்களிடையே இருந்தது. இதனை ஆரம்ப காலங்களில் முறைப்படுத்தின பெருமை, ஜெர்மனி மற்றும் சுவிட்சர்லாந்து நாடுகளை சார்ந்த பாஸல் மிஷனெரிகளுக்கே உரியதாயிருந்தது. ஆங்கிலேயர் தங்களுடைய ஆவணங்களில் இப்பணியினை 'கூலி மிஷன்' என குறிப்பிட்டனர். குன்னூர் யூனியன் ஆலயத்தைச் சேர்ந்த சில தோட்ட அதிபர்களும் இவ்வூழியத்துக்கு ஊக்கத்தை கொடுத்திருந்தனர்.

நீலகிரி வாழ் படுகர்களிடையே தங்களுடைய ஊழியத்தை நிறுவின (1846) பாஸல் மிஷன் சங்கத்தார் 1887-ஆம் ஆண்டு முதல் தேயிலைத் தோட்ட தொழிலாளர்களிடையில் சுவிசேஷப் பணியை நெறிப்படுத்த ஆரம்பித்தனர். இத்தேயிலைத் தோட்ட ஊழியத்தின் முன்னோடி நற்செய்திப் பணியாளர், கார்ள் சத்தியநாதன் அவர்கள். இவருடைய தந்தை திரு. ஞானாதிக்கம், பாஸல் மிஷன் சங்கத்தார் நடத்தி வந்த பள்ளிகளில் தமிழ் கற்பித்துக் கொடுப்பதற்காக தஞ்சாவூரிலிருந்து நீலகிரிக்கு வந்து குடியேறினார். கேத்தி மற்றும் கோத்தகிரியில் பணியாற்றிய இவருடைய மைந்தன் திரு. சத்தியநாதன் 1856 - ஆம் ஆண்டு பிறந்தார். பள்ளிப் படிப்பினைத் தொடர்ந்து அந்நாட்களில் மலபார் மாவட்டம் தலைச்சேரியில் இருந்த பாஸல் மிஷன் உபதேசியார்கள் பயிற்சி நிறுவனத்திற்கு அனுப்பப்பட்டார். ஆனால் அங்கு காணப்பட்ட வெப்ப நிலை ஒவ்வாமையினால் நீலகிரிக்கு திரும்பி வந்துவிட்டார். 1877 - ஆம் ஆண்டு முதல் மல்லனூர் எஸ்டேட்டிலும், பின்னர் அவாக்கா எஸ்டேட்டிலும் எழுத்தராக பணியாற்ற ஆரம்பித்த அவர், அதுமுதற் கொண்டே தோட்ட தொழிலாளர்களிடையில் சுவிசேஷகராகவும் கர்த்தரின் அழைப்பை செயற்படுத்த ஆரம்பித்து விட்டார்.

மலைகளின் மேல் இரட்சிப்பை பிரசித்தப்படுத்த அழைக்கப்பட்ட இந்த சுவிசேஷகனுடைய ஊழியம் ஒரு தீவிரமான எழுப்புதலை உருவாக்கியது என்பது மிகையல்ல. இதனை ஒரு தீர்க்கதரிசனத்தோடு அணுகிய பாஸல்மிஷன் சங்கத்தார் 1887 - ஆம் ஆண்டு கார்ள் சத்தியநாதன் அவர்களை இந்த ஊழியத்தின் முழுநேர பணியாளராகவும், முதன்மையாளராகவும் திருநிலைப்படுத்தினர். கலப்பையின் மேல் கையை வைத்து பின்னிட்டு பார்க்காமல் கார்ள் சத்தியநாதன் அவர்கள் விதைக்கிறவனாக சுற்றி இயங்கியதை சுருங்க சொல்லல் இயலாது. இந்த சுற்று ஊழியத்தில் பாஸல் மிஷன் சங்கத்தார் அநேக தேயிலைத் தோட்டங்களில் நடத்தி வந்த வந்தோருக்குரிய இரவு பள்ளிகளும் பெரும் பங்காற்றின. இப்பள்ளிகள் மூலம் கிறிஸ்தவர்களானோர் தங்கள் சொந்த இடங்களுக்குத் திரும்பி சென்ற பொழுது அங்கு திருச்சபைகள் உருவாகவும் காரணர்களாயிருந்தனர். தாராபுரம் (திருப்பூர் மாவட்டம்) மற்றும் சாம்ராஜ் நகர் (கர்நாடக மாநிலம்) ஆகிய இடங்களில் திருச்சபைகள் அவ்வாறே உருவானவை என்பது வரலாறு சுட்டும் உண்மை .

இந்த இரவுப் பள்ளிகளை மேற்பார்ப்பதில் திரு. சத்தியநாதன் அயரா முயற்சிகள் எடுத்தார். அவாக்கா மற்றும் அண்டையிலிருந்த எஸ்டேட்டுகளில் ஊழியம் வளர்ந்தபோது பாஸல் மிஷன் சங்கத்தார் 1889 - ஆம் ஆண்டில் உலிக்கல் மையத்தில் ஒரு ஆலயத்தை நிறுவினர். மல்லனூர் எஸ்டேட் முதற் கொண்டு கிளண்டேல், கொலக்கொம்பை, உலிக்கல் பகுதிகள் உட்பட குந்தா மட்டிலும் பரந்திருந்த சுமார் நாற்பது தேயிலைத் தோட்டங்கள் அனைத்திலும் திரு. சத்தியநாதன் அவர்களின் பாதம் படாத இடமே இல்லை என்று



சொல்லக்கூடும் (ஏசாயா 52 : 7). 'கடவுளைத் தவிர எவருக்கும் அஞ்சாதவர்' என்று பாஸல் மிஷன் ஆவணங்கள் இவரை குறிப்பிடுகின்றனர்.

இவ்வண்ணம் மேற்கண்ட ஊழியத்தை கால் நூற்றாண்டு காலம் தன்மேல் சுமந்து கொண்ட கார்ள் சத்தியநாதன் அவர்கள் 1912 - ஆம் ஆண்டு ஜீன் மாதம் 2-ஆம் நாள் பாஸல் மிஷன் ஆயராக அபிஷேகம் பெற்றார். ஆனால் கர்த்தருடைய தீர்மானத்தின்படி அதே ஆண்டு செப்டம்பர் மாதம் 3 - ஆம் நாள், தம்முடைய பரம அழைப்பிற்குள் கடந்து சென்றார். கார்ள் சத்தியநாதன் அவர்களைத் தொடர்ந்து குன்னூரை சேர்ந்த சி.டி. மனுவேல் உபதேசியார் அவர்கள் இந்த பெரும்பணியினை 13 - ஆண்டுகள் நிறைவேற்றினார். 1924 - ஆம் ஆண்டு அவர் ஆயராகவும் அபிஷேகம் பெற்றார். இதற்கிடையில் 1919 - ஆம் ஆண்டு முதல் குன்னூர் மெத்தோடிஸ்ட் மிஷன் பொறுப்புக்குள் இந்த ஊழியம் வந்தது. ஆரம்ப முதல் ஆடர்லி, கோடமலை, சிங்காரா மற்றும் முத்திரி எஸ்டேட்டுகள் ஆகிய பகுதிகளையும் உள்ளடக்கியிருந்த இந்த ஊழியத்தின் விரிவாக்கம் பின்னர் கொலக் கொம்பை, குந்தா, உலிக்கல் குரு சேகரங்களாக உயர்ந்தன. குன்னூர்-அருவங்காடு பகுதிகளில் பின்னாட்களில் ஊழியத்தை ஆரம்பித்த ஆங்கிலிக்கன் திருச்சபையாரின் சி.எம்.எஸ். சங்கத்தார் நான்சச் மற்றும் சேலாஸ் குருசேகரங்களை உருவாக்கினர். கூடலூர், கோத்தகிரி பகுதிகளின் ஊழியம் இவண் சொல்லப்படவில்லை. இவ்வூழியத் தளங்கள் அனைத்தும் 1947-ஆம் ஆண்டு தென்னிந்திய திருச்சபையின் ஒருமைப்பாட்டுக்குள் கொண்டு வரப்பட்டன. 1947 முதல் 1950 வரை மைசூர் திருமண்டலத்தைச் சேர்ந்திருந்த இப்பகுதிகள் 1950 - ஆம் ஆண்டு முதல் கோயம்புத்தூர் திருமண்டலத்தின் அங்கங்களாக உள்ளன.

**பின் குறிப்பு :** முதலாம் உலகப்போரின் (1914 - 18) போது ஆங்கிலேய அரசாங்கத்தார் ஜெர்மன் மிஷனரிகளை நாடு கடத்தி விட்டனர். அந்த சமயத்தில், நீலகிரியில் மேற்கண்ட பணித்தளத்தில் இறுதியாக பணியாற்றியவர் பிரடெரிக் ஷாட் அவர்கள். கார்ள் சத்தியநாதன் (வலது) அவர்கள் ஷாட் அவர்களோடு காணப்படும் மேற்கண்ட புகைப்படத்தை கொடுத்து உதவியவர், ஜெர்மனியில் ஹல்லெ நகரில் வசிக்கும் ஷாட் அவர்களின் கொள்ளுப் பேரன் திரு. டானியேல் ஷாட். மேற்கண்ட பணித்தளத்தை உருவாக்கி ஊழியத்தை நடத்தி வந்த மிஷனரிகள் பெயர்கள் வருமாறு : JJ. KNOBLACH, H. RISCH, C. FRITZ, W. STOKES, F. SCHAD

# திருச்சபையின் முதுகெலும்பு உபதேசியார்கள்!!

Dr.ஜான்சி பால்ராஜ்

கிறித்தவத்தின் வளர்ச்சித் தளம் திருச்சபைகள் தான். அத்திருச்சபைகளைக் கட்டிப்பராமரிப்பதில் ஆயர்கள் (Reverent), உபதேசியார்கள் (Caticst), மூப்பர்கள், அங்கத்தினர்கள்... போன்ற படிநிலைகள் வெளிப்படையாகத் தெரிந்தாலும் சேகரங்கள் என்ற திருச்சபைகளின் தலைமையகங்களைத் தவிர ஒரு திருச்சபையானது அனுதினமும் உபதேசியார்என்ற நேரடி கண்காணிப்பாளரின் பார்வையில் தான் இருக்கிறது.

சபையின் உள் கட்டமைப்பைச் சீரமைக்கும் பொறுப்பில் உபதேசியார்களே முதன்மையாக இருக்கின்றனர். (உபதேசியார் = உபதேசம் (sermon) செய்பவர்).

ஆனால் கிறித்தவத்தை இந்தியாவில் பெருமளவில் பரப்பிய ஐரோப்பிய மிஷனெரிகள் தான், இந்தியத் திருச்சபைகளில் இந்த உபதேசியார் என்ற பதவியை ஏற்படுத்தியிருக்கின்றனரே தவிர அவர்களது நாடுகளில் இந்தப் பதவி இருந்திருக்கவில்லை என்று வரலாற்றாசிரியர் டேவிட் பாக்கியமுத்து குறிப்பிடுகிறார்.

'கி.பி 1606 ஆம் ஆண்டு இந்தியாவிற்கு வந்த ஏசுசபை பாதிரியாரான டி.நோபிலி தான் முதன்முதலில் தமிழகத்தில் உயர்சாதியினராக கருதப்பட்டோர்களில் எழுதபடிக்கத் தெரிந்த சிலரை தேர்ந்தெடுத்து கிறித்தவச் சமயப் பணிகளுக்கு பயிற்று வித்தார். அவரைத் தொடர்ந்து வந்த பெஸ்கி என்ற வீரமாமுனிவர் தமிழகத்தில் சபைகளை நிர்வகித்து வளர்க்கும் உபதேசியார்களைப் பயிற்று வித்திருக்கிறார். இவர் உபதேசியார்களுக்கென்றே வேதியர் ஒழுக்கம் என்ற நூலையும் எழுதியிருக்கிறார்.

இந்த உபதேசியார்கள் புதிதாகக் கிறித்தவத்தை ஏற்ற மக்களுக்கு மேற்படி கிறித்தவச் சமயக் கொள்கைகளையும், நம்பிக்கைகளையும் போதித்து.

ஞானஸ்தானம் மற்றும் திடப்படுத்துதல் எனப்படும் கிறித்தவச் (சாக்கிரமந்து) சமய அடிப்படை சித்தாந்தங்களை ஆயர்கள் மூலம் பெறுவதற்கு அவர்களைப் பயிற்றுவித்து சபையின் நிரந்தர அங்கத்தினர்களாக்குவர். அத்தோடு சபையினரின் குடும்ப நற்காரியங்களுக்கும் துயர சம்பவங்களுக்கும் பெரும்பாலும் இவர்களே கிறித்தவ முறைமையின்படி முன்னின்று நடத்திச் செல்வர்.

புதிதாகக் கிறித்தவத்தை ஏற்றோர் அந்தந்தப் பகுதிகளைச் சார்ந்த கிறித்தவச் சமய எதிர்ப்பாளர்களால் எதிர்ப்புக்குள்ளாகும் போதும் மிஷனெரிகள் அறிவார்ந்த விதமாக கிறித்தவர்களுக்கென்றே தனிப் பஞ்சாயத்துகளையும் ஏற்படுத்தியிருக்கின்றனர். (டி. கிறிஸ்துதாஸ், திருநெல்வேலி அப்போஸ்தலர் ரேனியஸ்) இதன் மூலம் கிறித்தவர்கள் ஊர்ப் பொதுப் பஞ்சாயத்து முறைமைகளுக்கு

கட்டுப்பட வேண்டும் என்ற கட்டாயத்திலிருந்து விடுபட்டு சுதந்திரமாகச் செயல்பட முடிந்தது. இத்தகைய தனிப் பஞ்சாயத்துகளுக்கும் இந்த உபதேசிமார்களும் அறிவுரைகள் வழங்கி அவர்களுக்குள்ளான பிரச்சனைகளைத் தீர்த்து வைத்திருக்கின்றனர்.

ஆரம்ப காலகட்டத்தில் சில சமயங்களில் ஒன்றுக்கும் மேற்பட்ட சபைகளை ஒரே உபதேசியார் பொறுப்பெடுத்து நடத்த வேண்டியதாகவும் இருந்திருக்கிறது.

திருநெல்வேலி மாவட்டத்தில் ஆனைகுளம் என்ற ஊரில் சபையை (கி.பி1825)ஏற்படுத்திய மிஷனெரி இரேனியஸ், அச்சபைக்கு ஒரு உபதேசியாரையும் நியமித்திருக்கிறார்.( பெயரை அறிய முடியவில்லை) அந்த ஆனைகுளம் உபதேசியாரையே இங்கிருந்து பத்து மைல்களுக்கு அப்பாலிருந்த டோனாவூர் சபைக்கும் ( கி.பி1827)உபதேசியாரக பொறுப்பளித்துப் பராமரிக்க வைத்திருக்கிறார்.அவர் ஆனைகுளத்திலுள்ள சபையைக் கண்காணித்து கிட்டத்தட்ட பத்து மைல்களுக்கு அப்பாலுள்ள டோனாவூருக்கு நடந்தே வந்து சபைப் பணிகளைச் செய்திருக்கிறார்.

ஆரம்பகால உபதேசியார்கள் அச்சபையைச் சார்ந்த மக்களால் பெரிதும் மதிக்கப்பட்டு அவர்களது குடும்ப உறுப்பினராகவும் ஆலோசனை அறிவுரைகள் வழங்கும் உபாத்தியாராகவும் ஏற்று நடந்திருக்கின்றனர்.

பொதுவாகச் சபை ஏற்படுத்தப்பட்ட ஊர்களில் மிஷனெரிகள் பள்ளிகளையும் ஏற்படுத்த விளைந்திருக்கின்றனர். அப்பள்ளிகளிலும் உபதேசியார்கள் ஆசிரியராக இருந்திருக்கின்றனர். (திரு. ஜெயசீலன், 19 நூற்றாண்டு உபதேசியார்கள்)

சபை மக்களின் தனிப்பட்ட பிரச்சனைகளையும் அவர்களது சமூக பொருளாதாரப் பிரச்சனைகளையும் தங்களது சபை இணைந்திருந்த தலைமை ஆயர்களுக்கு தெரிவித்து அவர்களது துயரங்களைப் போக்கும் தீர்வுகளையும் எடுக்க உதவியிருக்கின்றனர் இவ்வுபதேசியார்கள்.

குறிப்பாக, கி.பி1833ஆம் ஆண்டு டோனாவூர் சேகரத்தின் தலைமை உபதேசியாராக இருந்த இரத்தினம் என்பவர், அக்காலகட்டத்தில் அடிக்கடி ஏற்பட்ட காலரா, விசபேதி போன்ற கொள்ளை நோய்களால் இறப்பு எண்ணிக்கை அதிகமாகி குடும்பங்களில் கணவனை இழந்த பெண்களும் பெற்றோரை இழந்த குழந்தைகளுமாக பராமரிப்போரின்றி தடுமாறிய வேளைகளில் கைம்பெண்களின் குடும்ப நிதிக்காக ஒவ்வொரு குடும்பத்தாரும் ஒரு சிறு தொகையை ஆண்டுதோறும் சபையில் செலுத்தி அதை சேமித்து சமய சகாய நிதி ( Friend in Need Sangam) என்ற பெயரில் அவர்களுக்கு கொடுத்து உதவினால் பாதிக்கப்பட்ட அக்குடும்ப பெண்களுக்கு பேருதவியாகயிருக்கும் என்ற ஆலோசனையை இரேனியஸ் மிஷனெரியிடம் முதலில் வழங்கியது இந்த இரத்தினம் உபதேசியாரே. அத்திட்டமே பிற்காலத்தில் ( கி.பி 1838 முதல்) ஆண்டு தோறும் மாம்பழச்சங்கம் என்ற பெயரில் இன்றுவரை திருநெல்வேலி திருமண்டலத்தில் பண்டிகையாகக் கொண்டாடப்பட்டு வருகிறது.

இன்றைய காலகட்டத்திலும் ஆண்டுதோறும் ஒவ்வொரு குடும்பமும் ஒருநாள் வருமானத்தைக் காணிக்கையாக பெற்று இப்பண்டிகையில் அந்தந்த சேகர ஆயரால் படைக்கப்படுகிறது.இதில் பெறப்படும் தொகை திருமண்டலத்திலுள்ள கைம்பெண்களின் நலனுக்காக செலவிடப்படுவதாகக் கூறப்படுகிறது.

ஆக, திருநெல்வேலி திருமண்டலத்தின் மாம்பழச்சங்கத்தின் தந்தை என போற்றப்படுபவர் டோனாவூர் இரத்தினம் உபதேசியாரேயாவார்.

இவ்வாறு இன்றும் ஒவ்வொரு திருச்சபையிலும் அதில் பணியாற்றும் உபதேசியார்கள் இல்லாமல் நேரடியாக சேகரத் தலைவரான ஆயரால் சமயப் பணிகள் செய்வது என்பது இயலாத காரியம். திருச்சபையின் முதுகெலும்பாக இருந்துவரும் உபதேசியார்களின் சமயப்பணி மிகவும் போற்றத்தக்கதாகும்.

அருள்திரு.
இரா. சாமுவேல் ஜெயசீலன்

# நற்குணத்தான் உபதேசியார்

தாவீது உபதேசியார் சாத்தான்குளம் சந்தையில் வாரந்தோறும் செய்த ஊழியத்தின் பயனாக செக்கடிவிளை சபை உண்டாயிற்று.

செக்கடிவிளையில் கிறிஸ்து மார்க்கத்தில் சேர்ந்தவர்கள் பத்து குடும்பத்தினர். அவர்களுக்கு ஒரு கோயிலிருந்தது. அம்மக்கள் அக்கோயிலில் வைத்துத் தாங்கள் அதுவரை வணங்கி வந்த சாமிசிலைகளை அகற்றிவிட்டு அதை தாங்கள் கர்த்தரை வணங்கும் தேவாலயமாக மாற்றியமைத்தார்கள். ரேனியஸ் ஐயர் 18.02.1825 அதை பிரதிஷ்டை செய்தார். சாத்தான்குளம் சபையாரும் அங்குள்ள ஊழியரும் செக்கடிவிளை கிறிஸ்தவர்களை ஞானஸ்நானத்துக்கு ஆயத்தப் படுத்தினர். ஐயம்பெருமாள் என்னும் முதியவர் (வயது 79) அவ்வூரில் முதல் கிறிஸ்தவர். அவருடன் சிவஞானம், சிவசுப்பிர மணியன், நல்லபெருமாள் முதலியோரும் மேலும் பலரும் கிறிஸ்து நாதரை ஏற்றுக் கொண்டனர். சாத்தான்குளம் சபையாரும் ஊழியர் சிலரும் அவ்வூரார் கிறிஸ்தவ விசுவாசத்திலிருந்து விலகாதிருக்க பெருந்துணையாயிருந்தனர். ரேனியஸ் செக்கடிவிளையில் கிறிஸ்துவை ஏற்று கொண்ட சிவசுப்பிரமணியன், நல்லபெருமாள், சிவஞானம் மூவரையும் பாளையங்கோட்டை செமினரியில் உபதேசியார் பயிற்சி பெறும்படி செய்து 25.12.1825 கிறிஸ்மஸ் தினத்தன்று ஞானஸ்நானம் கொடுத்தார்.

சிவசுப்பிரமணியன் - அருளானந்தம் சிவஞானம் - ஆரோக்கியம் நல்லபெருமாள் - நற்குணத்தான் என்றும் புதிய பெயர்களில் ஞானஸ்நானம் பெற்றனர்.

நற்குணத்தான் செக்கடிவிளையில் முதல் உபதேசியாக நியமிக்கப்பட்டு சிறந்த ஊழியம் செய்து தன் ஊராரை ஞானஸ்நானத்துக்கு ஆயத்தப் படுத்தினார். ரேனியஸ், ஸ்மிட் முதலியோரும் அடிக்கடி அவ்வூராரை சந்தித்துப் போதித்து வந்தனர். நற்குணத்தான் உபதேசியாரின் ஊழியத்தின் பயனாக மறுவருஷம் (1826) செப்டம்பர் 26ம் நாளில் ரேனியஸ் செக்கடிவிளைக்குச் சென்று அக்கிறிஸ்தவ மக்களைச் சோதித்து அவர்களில் 33

ஆத்துமாக்களுக்கு ஞானஸ்நானம் கொடுத்தார்.

நற்குணத்தான் உபதேசியாரின் நான்கு மக்களும் மோசே, அன்னமமை, ஞானமுத்து, பேதுரு என்று ஞானஸ்நானம் பெற்றார்கள் அவருடைய நண்பனான ஆரோக்கியத்தின் மனைவி பரமராக்கியம் அவ்வாராதனையில் ஆனந்தாயி (22) என்ற பெயருடன் கிறிஸ்து சபையில் அங்கமானார்.

CMS சபையில் செக்கடிவிளை உபதேசியார் நற்குணத்தான் ஒரு திறமை மிகுந்த சுவிசேஷகன். அவரது மனைவி முத்தாயி அவருக்கேற்ற உத்தமி. சுண்டங்கோட்டையில் ஒரு காலத்திலிருந்த S.P.C.K சபை அழிந்துவிட்டது. ஆனால் S.P.G மிஷன் ஆசேர் உபதேசியார் அவ்வூரிலிருந்து கொண்டு அண்மையிலுள்ள சபைகளில் ஊழியம் செய்து வந்தார். நற்குணத்தான் உபதேசியார் சுண்டங்கோட்டையில் சுவிசேஷம் கூறி ஒரு காலத்தில் கிறிஸ்தவர்களாயிருந்து மறுதலித்துப் போனவர்களில் சிலரையும் புதிதாக கிறிஸ்துநாதரை ஏற்றுக்கொண்ட சிலரையும் சேர்த்து சுண்டங்கோட்டையில் ஒரு CMS சபையை நிறுவினார் 1829. அச்சபையை விசுவாசத்தில் ஊன்றக் கட்டுவதின் அவசியத்தை உணர்ந்த ரேனியஸ் நற்குணத்தானை சுண்டக்கோட்டைக்கு மாற்றினார். ஆசேருக்கு இது பிடிக்கவில்லை . அவர், நற்குணத்தான் S.P.G சபையாரை ஆசைமொழிகள் கூறித், தன் மத்து CMS சபையை நாட்டிவிட்டாரென்று, ரோசனையரிடம் தக்கார். ரோசன் இதுபற்றி ரேனியஸிடம் கேட்டெழுதவே, எலத்தில் அவ்வூரிலொரு S.P.C.K சபையிருந்து அழிந்து தான் S.P.G ஊழியத்தின் மேற்பார்வைப் பொறுப்பை ஏற்ற புகார் கொடுத்தார். ரோசன் இது அவர், ஒருகாலத்தில் அவ்வூரிலொ போனதாகவும், தான் S.P.G ஊழியக் காலத்தில், சுண்டங்கோட்டையில் நற்குணத்தானின் ஊழியம் பயன்தருவதற்கான தோற்றங்களுண்டான காலத்தில் தானே தான் ஆசேரை அவ்வூரில் நியமித்துச் சுற்றியுள்ள சிறுசபைகளைப் பார்த்துக் கொள்ள செய்ததாகவும், ஆனால் அவர் பலவீனத்தினிமித்தம் நீங்கிக் கொண்ட சமயத்தில் CMS சபையொன்று அங்கு உருவாகிவிட்ட படியினாலேயே நற்குணத்தானை அவ்வூருக்கு மாற்றினதாகவும், பின் ரோசன் வந்ததும் அவர் ஆசேரை அங்கு நியமித்திருப்பதால், அது CMS சபையாயிருப்பினும், அதை S.P.G க்கு கொடுத்துவிடத் தனக்கு ஆட்சேபனை இல்லையென்று எழுதி, நற்குணத்தானை உடனே கொம்மடிக்கோட்டைக்கு மாற்றிவிட்டார். மிஷன்களைப் பொறுத்தவரையில் பிரச்சினை முடிவுற்றது. ஆனால் சுண்டங்கோட்டைச் சபை அந்த முடிவை ஏற்கவில்லை! எனினும், மிஷனெரிமாரின் தீர்ப்பை எதிர்ப்பதென்பது சிந்திக்கக்கூடாத செயலாச்சே! ஆகையினால் அச்சபையார், தங்களைக் கர்த்தரிடம் நடத்தின நற்குணத்தான் பிரசங்கம் செய்யும் கொம்மடிக்கோட்டைக்கே போய் ஆராதிக்கலாயினர். ஆசேரின் ஆராதனைகளுக்குச் செல்வாரில்லை. அதைக் கேள்வியுற்ற ரோசன் உடனே ஆசேரைச் சாயர்புரத்திற்கு மாற்றிச், சுண்டங்கோட்டைச் சபையை CMS இடம் ஒப்புவித்தார். அதுமுதல் அது CMS உடன் நிலைத்துவிட்டது. நற்குணத்தான் கொம்மடிக்கோட்டையில் சபை ஊழியராக பணிசெய்யும் போது எதிரிகளினால் துன்பம் அதிகமானது. எதிரிகள் கிறிஸ்தவர்களைத் தாக்கி அடித்துப் பலரைக் காயப்படுத்தினார்கள். பின், தங்கள் மீது பொல்லாப்பு வருமென்றஞ்சி, ஒரு முஸ்லீமைக் கிறிஸ்தவர்கள் கொலைசெய்துவிட்டதாகத் தாசில்தாரிடம் முறையிட்டுக்கொண்டார்கள்.

தாசில்தாரின் சேவகர் கிராமத்துக்குள் சென்று, கிறிஸ்தவர்கள் அனைவரையும் அடித்து, வீடுகளை சூறையாடித் தாங்கொண்ணாத் துன்பத்துக்குள்ளாக்கினர். பின், அவர்களில் பலரை இழுத்துக் கொண்டுபோய்ச் சிறையிலடைத்தனர். வழக்கு நடந்தது. மாஜிஸ்திரேட் வழக்கை விசாரித்தார். விசாரணைக் காலத்தில், அது தங்களுக்குப் பாதகமான தீர்ப்புடன் முடியுமென்று கண்ட பகைவர்கள் சபையாரை அணுகி, ஒப்புரவாகிக்கொள்ள முயன்றார்கள். ஆனால் ரேனியஸ், வழக்கு முடியும் வரை எதிரிகளுடன் சமாதானப் பேச்சு வைத்துக்கொள்ள வேண்டாமென்று அவர்களுக்கு ஆலோசனை கொடுத்ததினால், மாற்றாரின் முயற்சி பலிக்கவில்லை.

விசாரணையில், மரணமான முஸ்லீம் ஒரு வயோதிபரென்றும், ஐந்து மாத காலம் வியாதியாயிருந்தாரென்றும், ஏழைகளான அவரது சுற்றத்தாரை ஏமாற்றி, அவரது தலையில் காயமுண்டாக்கிக், கிறிஸ்தவர்களே அவரை அடித்துக்கொன்றதாக எதிரிகள் புகார் செய்தார்கள். தாசில்தார் தலத்துக்குச் சென்று பிரேதத்தைப் பார்த்து மரணம் அக்காயத்தினால் ஏற்பட்டது இல்லையென்று அறிந்து, சாட்சிகளை விசாரித்ததில், அப்பெரியவர் கொலை செய்யப்படவில்லையென்றும், கிராம அதிகாரிகளுக்குக் கொலை நடந்ததாகக் கூறப்பட்ட விஷயம் தெரியாதென்றும், அவர் அறிந்தார். எனவே வழக்கு தள்ளுபடியாகிச், சிறையிலிருந்த கிறிஸ்தவர்கள் விடுதலையானார்கள் (23 ஜனவரி 1830). இந்நற்செய்தியைக் கேள்விப்பட்ட ரேனியஸ் கர்த்தருக்கு உளமார நன்றித்துதி செலுத்தினார்.

இக்கொடிய இடுக்கண்கள் காரணமாக, கொம்மடிக்கோட்டையிலும் சுற்றுப் புறங்களிளுமிருந்த சில ஏழைக் கிறிஸ்தவர்கள் வீடு வாசல் இழந்து நிர்கதியானார்கள். அவ்வெளிய ஜனங்களுக்கு பாதுகாப்பான ஒரு இடம் தேவையென்றுணர்ந்த ரேனியஸ் கிராமத்துக்கு அருகில் ஒரு நிலம் வாங்கி, அவர்களை அதில் குடியேற்றினார் (மார்ச் 1830), அவ்வூருக்கு **அனுக்கிரகபுரம்** என்று பெயர் வைத்தார். நற்குணத்தான் உபதேசியாரும் அவருடைய மனைவி முத்தாயி அம்மாளும் இவ்வேழைக் கிறிஸ்தவர்களுக்கு உறுதுணையாயிருந்தனர். அதில் முதலாவது குடியேறியவர்களில் கிறிஸ்தவ அறிவிலும் பக்தியிலும் சிறந்திலங்கியவர்கள் பெருமாளும் (31) அவருடைய மனைவி பார்வதியும். அனுக்கிரகப்புரத்தைப் பார்க்க வந்த ரேனியஸ் ஐயர் அங்கு ஆராதனை நடத்திப் பெருமாளுக்குத் தாவீது என்றும், பார்வதிக்குப் பாக்கியம் என்றும் அவர்களுடைய குழந்தைகளுக்கு வேதக்கண்ணு, ஏசுவடியான் என்றும் பெயர்கள் வைத்து ஞானஸ்நானம் கொடுத்தார். (28 ஏப்ரல் 1830).

நற்குணத்தான் மகன் ஞானமுத்து திருவரங்கநேரி சபையின் முதல் சபைஊழியர் (1842). ஞானமுத்து திருவரங்கநேரியில் யோசேப்பு என்பவரின் மகள் பாக்கியத்தை திருமணம் செய்தார்.

நற்குணத்தான் அனுக்கிரகப்புரம் சபையிலேயே ஆசிரியராகவும் சபை ஊழியராகவும் பணி செய்து அங்கேயே மரித்து அடக்கம் செய்யப்பட்டிருக்கலாம். நற்குணத்தாரின் சந்ததி நம்மில் யார் யாரோ…

ஆள்வாநேரி Mr. D. அருளப்பன் பென்ஷன் விசாரணை உபாத்தியாயரின்

# நேசமனைவி அருள் பொன்னம்மையின் ஜீவிய சரித்திரம்

மன்னா செல்வகுமார்

அருள் பொன்னம்மை, டோனாவூர் சேகரம், காடுவெட்டி ஊரில், மிஷன் ஊழியராயிருந்த Mr. நல்லமுத்து உபதேசியாருக்கு, 1858-ம் ஆண்டில் பிறந்த 3-வது குமாரத்தி.

இந்த அம்மாள் சிறு பிராயத்தில், காடுவெட்டி மிஷன் கிராம பள்ளிக் கூடத்திலும், பின்பு டோனாவூர் போர்டிங் பெண் பள்ளிக்கூடத்திலும், கல்வி கற்றார்கள்,

இந்தப் பள்ளிக்கூடம், 1865-ம் ஆண்டு பாளையங்கோட்டை போர்டிங் பெண், பள்ளிக்கூடத்தோடு சேர்க்கப்பட்டதால், அந்தப்பள்ளிக்கூடத்தில் சேர்ந்து பற்பல பாடங்களோடுகூட விசேஷமாய் வேதபாடங்களிலும், தையலிலும், கனம் சார்ஜென்ட் ஐயரவர்கள் (அத்தியக்ஷரவர்கள்) இவர்கள் அம்மாளவர்கள் விசாரணைக்குள் படித்து, வேதபாடப் பரீக்ஷையில் பரிசுகள் பெற்றிருந்தார்கள்.

இந்த அம்மாள் பள்ளிக்கூடத்தை விட்டதின் பின், மகாகனம் சார்ஜென்ட் அத்தியக்ஷரவர்கள் இவர்களுக்கு மிகவும் அருமையான நற்சாக்ஷி பத்திரம் ஒன்று கொடுத்து அதில் விசேஷமாக அவர்கள். கிறிஸ்தவ ஜீவியத்தைப்பற்றி புகழ்ந்து பேசியிருக்கிறார்கள்.

1879-1888. கண்டி, நூரேலியா, சிவகாசி முதலான இடங்களில் இருந்த சமயத்தில் எப்போதும் ஆண்டவருடைய வேலையைப்பற்றி கருத்துள்ளவர்களாகயிருந்து தாய்மார் கூட்டங்களில் உதவிபுரிந்து வந்தார்கள்.

1888-1907-சாட்சியாபுரம் போர்டிங் பெண் பள்ளிக்கூடம். வட திருநெல்வேலி முழுமைக்கும் இந்த ஒரேயொரு போர்டிங் பெண் பள்ளிக்கூடம் மாத்திரம் இருந்தது. இந்தப் பள்ளிக்கூடத்தில் இந்த அம்மாள் 1-வது உதவி **உபாத்தியாயினி**யாக, நல்ல வேலை பார்த்து பிள்ளைகளின் தேகசுகத்தைப்பற்றிக் கரிசனையாயிருந்து அவர்கள் தேவபக்தியில் வளரும்படி வேண்டிய பிரயாசம் எடுத்துக் கொண்டார்கள் ஐரோப்பிய குருமார்கள், பிள்ளைகளை வேதபாடங்களில் பரிக்ஷித்து அவர்கள் கொடுத்த திருப்திகரமான விடைகளுக்காக சந்தோஷப்பட்டு, அவர்களுக்கு வெகுமானம் கொடுத்தார்கள்.

இரண்டு வெவ்வேறான சமயங்களில், மேலதிகாரிகள், இந்த அம்மாளின் கணவனை, புரமோஷன் பேரில் மேலான உத்தியோகத்திற்கு மாற்றும்படி நோக்கமாயிருந்தபோது கனம் பின்னிமோர் அம்மாளவர்களும், கனம் உவாக்கர் அம்மாளவர்களும், தனித்தனியே, 'Mr. அருளப்பன் இல்லாமல் நான் இந்த பள்ளிக்கூடத்தை மேல் நடத்திக்கொள்ள முடியாது என்ற சொல்லி நற்சாக்ஷி பகர்ந்து' பணி மாறுதலை நிறுத்திப்போட்டார்கள்.

1905- நவம்பர் 25ம் தேதி இந்தியா உயிர்ப்பிக்கப்படும்படி ஜெபம் செய்ய குறிக்கப்பட்ட தினம் :

இந்த நாளில் இந்த அம்மாள், பரிசுத்த ஆவியின் அருள் மாரிக்காக, பள்ளிப்பிள்ளைகளை வைத்து விசேஷத்த ஜெபக்கூட்டம் நடத்திக்கொண்டிருக்கும்போது, முதலாவது இந்த அம்மாள் பேரிலும், அப்பால் பள்ளிப் பிள்ளைகள் யாவர்பேரிலும் பரிசுத்த ஆவியின் வரம் இரங்க, எல்லாரும் அழுகையோடும், புலம்பலோடும் பாவமன்னிப்புக்காகக் கெஞ்ச யாவரும் பாவமன்னிப்படைந்து, பரிசுத்த ஆவியைப் பெற்று, உயிர்ப்பிக்கப்பட்டார்கள்.

கனம் உவாக்கர் ஐயரவர்கள் கண்டியில் மிஷன் ஊழியருக்கு ஆவிக்குரிய கூட்டம் நடத்திக்கொண்டிருக்கும் போது, சாட்சியாபுரம் பெண்கள் பள்ளிக்கூடத்திலுண்டாகிய ஆவியின் எழுப்பு:தலைப்பற்றிக் கேள்விப்பட்டு, அவர்கள் கண்டியைவிட்டு புறப்பட்டபின், நேரே சாட்சியாபுரத்திற்கு வந்து, விசேஷித்த ஆவிக்குரிய கூட்டம் நடத்தின போது, அவர்கள் சகலத்தையும் நுட்பமாய்க் கவனித்து, முடிவில் இவ்விடத்து போர்டிங் பெண்பிள்ளைகளால் நடத்தப்படும் கூட்டங்கள் சரியான ஆவிக்குரிய கூட்டங்கள் தானென்று சாட்சி பகர்ந்து, சந்தோஷத்துடன் தங்கள் இருப்பிடமாகிய டோனாவூருக்குச் சென்றார்கள். இந்தக் கூட்டங்களுக்கு வந்த பற்பல வியாதியஸ்தர் சுகமடைந்தார்கள். வல்லமையான பிசாசுகள் பிடித்திருந்த பலரிடமிருந்து பிசாசுகள் ஓடிப்போய்விட்டன. மூர்க்கக் கொண்டிருந்த பிசாசு பிடித்த ஒரு ஸ்திரீ இந்தக்கூட்டத்துக்கு வந்து, பரியாசம் பண்ணிக்கொண்டிருக்கையில் திடீரென்று பிசாசு அவளைக் கீழே விழத்தள்ளி அவளை அலைக் கழித்து, ஓடிப்போய்விட்டது. மூர்ச்சையடைந்திருந்த அவளுக்காக ஜெபித்தபின், அவள் சுகமாகி, குணப்பட்டு, 'மெய்யாகவே, தேவன் உங்கள் நடுவில் இருக்கிறார்' என்று சாட்சி பகர்ந்து, தேவனை மகிமைப்படுத்தினாள்.

**1908-1920. சுவிசேஷபுரம்**

இந்த இடத்தில் 1912- ஆண்டு பாதி வரை கனம் சிமியோன் அம்மா அவர்களின் தாய்மார் கூட்டங்களில் அவர்களுக்கு இந்த அம்மாள் உதவி செய்தார்கள். கனம் அம்மாளவர்கள் அவ்விடத்தை விட்டு போனபின் இந்த அம்மாள், ஏழைகள், வியாதியஸ்தர் முதலியவர்கள் வீடுகளைச் சந்தித்து, அவரவருக்கு வேண்டிய புத்திபோதனைகள் சொல்லியதுடன்; உதவி ஒத்தாசைகளும் செய்து வந்தார்கள்.

தினந்தோறும் மதியம் தங்கள் சுய இஷ்டப்படி இவர்கள் வீட்டித் வரும் வாலிபப் பெண்களுக்கு அவர்கள் விரும்பிக் கேட்டுக்கொண்ட ஆவியின் எழுப்புதல் பாட்டுகளைக் கற்பித்து ஜெபஞ்செய்து அவர்கள் வீடுகளுக்கு அனுப்பிவந்தார்கள்.

**1921-1928. ஆள் வானேரி.**

இந்த அம்மாள் சவிசேஷபுரத்திலிருந்தபோது செய்துவந்த பிரகாரம் இவ்விடத்திலும், எழைகள், வியாதியஸ்தர் வீடுகளைச் சந்தித்து, அவர்களுக்குத் தேவையாயிருக்கும் உதவி ஒத்தாசைககளை 1927- முடிவுவரை செய்துவந்தார்கள். 1928-ஆரம்பமுதல், வயோதிபத்தினால் உன்டான பெலவீனத்தினால், வெளியே போய்வரக் கூடாமல், வீடு மட்டும் உதவியாய், தினம்தோறும் வேதம் வாசித்து, தியானித்து ஜெபிக்கிறதும் மார்க்க சம்பந்தமான பத்திரிகைகளை வாசிக்கிறதும், தன்னைப் பார்க்க வருகிறவர்களிடம், பக்ஷமாய்ப் பேசிக்கொண்டிருப்பதுமாகத் தன் நாட்களைப் பின்னிட்டு வந்தார்கள்.

ஓய்வுநாட்கள் தோறும், கோவில் ஆராதனை நடந்து கொண்டிருக்கும் நேரத்தில் அந்தந்த ஞாயிறுக்குரிய சங்கிதங்களையும், 1-ம், 2-ம் பாடங்களையும், வாசித்துக்கொண்டிருப்பார்கள். அப்பால் கோவிலில் பண்ணப்பட்ட பிரசங்கத்தை தன் புருஷனிடம் கேட்டு, சிந்தனை செய்து, ஆறுதலையடைந்து கொள்வார்கள்.

குருக்களைத் தக்கபடி கனப்படுத்துவதும், அந்நியரை உபசரிப்பதும் தரித்திரருக்கும், வியாதியஸ்தருக்கும் வேண்டிய உதவி செய்வதும், சகல பேரோடும் சமாதானமாயிருப்பதும், ஒருவருக்கும் தீங்கு செய்யாதிருப்பதும், சமயம் வாய்க்கும் போதெல்லாம், கிறிஸ்துவின் அன்பை மற்றவருக்கு தெரிவிப்பதும், இவர்களிடம் மாறுபடாமல் எப்போதும் ஒன்று போலவே கடைசிவரைக்கும் இருந்தது.

இந்த அம்மாள் 1928-நவம்பர் 16-ம் தேதி இரவு, குடும்ப ஜெபத்தில் கடைசியாக **'தேவா உன் அன்பின் சத்தத்தைக் கேட்டு'** என்ற பாட்டைத் துவக்கி மிகவும் அருமையாய் பாடினார்கள்,

இந்த அம்மாள் 1928 நவம்பர் 17-ம் தேதி சாயந்தரம் 3 மணிக்குப்போய் தன் புருஷனிடம் சம்பாஷித்துக் கொண்டிருக்கையில் அவர்களைப் பார்த்து, 'இப்போது இயேசுநாதர் என்னிடம் வந்து' 'ஆயத்தமாயிரு' என்று சொல்லிப்போகிறார் 'என்று சொன்னார்கள்.' அதற்கு அவர்கள் இயேசுவினண்டையே எப்போதும் ஆயத்தமாய்த்தானே இருக்கிறாய், என்றாலும் இன்னும் ஏதாவது மன்னிக்கப்படாத பாவங்கள் மறைந்து இருக்குமானால், அவற்றை பரிசுத்த ஆவியின் உதவியைக் கொண்டு கண்டுபிடித்து, கிறிஸ்துவினிடம் அவைகளை அறிக்கையிட்டு, பூரணபாவ மன்னிப்பையும், மனச் சமாதானத்தையும், அவரிடம் 'பெற்றுக்கொள்' என்று சொன்னார்கள், அந்தப்படி அவர்கள் கர்த்தரை நோக்கி தனிஜெபம் செய்து கொண்டிருந்தார்கள். அதின் முடிவில், தன் நேச புருஷனையும், குமாரர் குமாரத்திகள், மருமக்கள் பேரப்பிள்ளைகளையும் ஆசீர்வதிக்கும்படி கர்த்தரை வேண்டிக்கொண்டார்கள், நமது அருமை இரக்ஷகரின் போதனைக்கிசைய அவருடைய நாமத்தில் எப்போதும் சந்தோஷமாயிருப்பதும், யாவருக்கும் நன்மை செய்வதும், சிறுவர்களைச் சந்தோஷப்படுத்துவதுமான இவைகளே உத்தமியாகிய இந்த அம்மாள் தன் காலமெல்லாம் கைக்கொண்டு நடத்திவந்த காரியங்களாயிருந்தது.

அதன் பின் மாலை 5 மணிக்குப்போல் அவர்களுக்கு நித்திரை மயக்க முண்டாகி மறுநாளாகிய 18-11-1928 ஞாயிறு காலை 8 மணிக்கு அவர்கள் புருஷன் அவர்களை எழுப்பும் வரை அயர்ந்த நித்திரையிலிருந்தார்கள். தன் புருஷன் சத்தம் கேட்டவுடனே, தன் இரண்டு கண்களையும் தெளிவாய்த் திறந்து, அவர்களை நோக்கிப் பார்த்தார்கள். அப்போது இந்த அம்மாளின் முகம், முன் ஒரு போதும் தோன்றாததிருந்த, புன்சிரிப்போடு கூடிய பிரகாசமுள்ள மலர்ந்த முகமாய்த் தோன்றின. தன் நேச புருஷனுடன் பேச ஆவல்கொண்டு, தன் நாவை அசைத்து வார்த்தைகளை உச்சரித்தார்கள். ஆனால் அந்த வார்த்தைகளில் யாதொன்றும், அவர்கள் புருஷன் செவியில் கேட்கவில்லை. இதை அவர்கள் புருஷன் கவனித்தவுடன், கர்த்தராகிய இயேசு தாமே வந்து, அந்த அம்மாளின் கையைப் பிடித்து நடத்தி, மரண நதியாகிய யோர்தானைக் கடக்கும்படி செய்கிறதாக அறிந்து, அருகிலிருந்து இடைக்கிடையே பால் மாத்திரம் அவர்கள் வாயில் ஊற்றிக் கொண்டிருக்க, அன்று காலை 9 மணிக்கு இந்த உத்தமியின் ஆவி யாதொரு வருத்தமின்றி சமாதானத்துடன் தன் சரீரத்தைவிட்டு நீங்கி, தான் உத்தமத்துடன் சேவித்து வணங்கி வந்த தன் மீட்பரும், நேசருமாகிய 'அன்புள்ள இயேசு சுவாமியின் திருக்கரம் சேர்ந்தது. உடனே கோவில் துக்கமணி தொனித்தது **ஆழ்வானேரி** உள்ளூரிலுள்ள ஆண்கள் பெண்கள் யாவரும் பாளையங்கோட்டையிலும், மற்றும் இதர கிராமங்களிலுமுள்ள இனத்தார் சிநேகிதர்களில் சிலரும், வீட்டுக்குவந்து, இந்த உத்தமியாகிய அம்மாளுக்காக உள்ளக்கனிவுடன் அழுது துக்கம் கொண்டாடினார்கள்.

உத்திரவுப் பிரகாரம் செய்யப்பட்டிருந்த உறுதியும் அலங்காரமுமான பிரேதப்பெட்டி பாளையங்கோட்டையிலிருந்து வந்து சேர்ந்தவுடன் அவர்களின் உடலை அதனுள் வைத்தபின் கனம் ஜான் ஜோசப் ஐயர் அவர்கள் அருமையான ஒரு ஜெபம் செய்தார்கள். கோவில் துக்கமணி அடித்துக் கொண்டேயிருந்தது. அப்பால் பெட்டியைச் சுமக்கும் ஆறு நண்பர்கள் அதைச் சுமந்து கொண்டு, பிரதான தெருவின் மார்க்கமாய் செல்ல, பாடகர்கள் பெட்டியின் முன்னுக்கு பாடிக் கொண்டு போக, இருபக்கங்களிலும், பின்னுக்கும் ஏராளமானவர் செல்ல, பெட்டியானது கோவில் பிரதான வாசலுக்கு முன் வந்தவுடனே, கோவில் முகப்பு மண்டபத்தில், வெண்மையான நிலையங்கிதரித்து ஆயத்தமாய் நின்று கொண்டிருந்த, மூன்று குருமார்களில், மரித்துப்போன இந்த அம்மாளின் மருமகனாகிய கனம் G. தேவதாசன், B. A. L T. ஐயாவர்கள் எதிர் கொண்டு வந்து பெட்டியின் முன் மெதுவாய்ச் சென்று அடக்க ஆராதனையின் முதல் பாகத்தை வாசித்துக் கொண்டே போனார்கள், கோவில் மண்டபத்தைச் சேரவும், பிரதான வாசலுக்கு முன் ஸ்தூல்களுக்கு மேலாக, ஆயத்தம் செய்து வைக்கப்பட்டிருந்த பலகையின் மீது, பெட்டியானது இறக்கிவைக்கப்பட்டது. அப்பொழுது அந்த அம்மாளின் அடுத்த மருமகனாகிய கனம் V. A. தாவீது ஐயரவர்கள் ஆராதனை முறையில் கண்ட பிரசங்கத்தை வாசித்தார்கள். அப்புறம் பெட்டியானது கல்லறைத் தோட்டத்திற்கு கொண்டு போகப்பட்டு, அங்கு அவர்களால் மிகவும் நேசிக்கப் பட்ட அவர்கள் தமையனாரின் கல்லறைக் கருகே, தயார் செய்து வைக்கப்பட்டிருந்த குழிக்குள் இறக்கி வைக்கப்பட்டது. அப்போது தலத்துக் குருவாகிய கனம் ஜான் ஜோசப் ஐயரவர்கள் ஆராதனையின் கடைசிப் பாகத்தை வாசித்து, அடக்கத்தை முடித்தார்கள்,

**'என் ஆவி என் இரக்ஷகராகிய தேவனில் களிகூருகிறது.'**

